# ஒரே ஒரு பைசா செலவில் 1 புடவை அல்லது 3 சட்டைகளுக்குப் பளிச்சிடும் வெண்மை தருகிறது

## ...மாக்ஸிம்* எல்லாத் துணிகளுக்கும் பளிச்சிடும் வெண்மை அளிக்கிறது

**அதிக சிக்கனமானது!**

மாக்ஸிம் ஒன்று திரண்ட, நீலநிற, திரவ வடிவிலான வெண்மை அளிக்கும் சாதனம்; இது உபயோகிக்க எளிதானது. ஒரு துணிக்கு சராசரி ஒரே ஒரு துளி மாக்ஸிம் போதும். ஒவ்வொரு 100 மி.லி. மாக்ஸிம் பாட்டிலிலும் 1000 துளிகளுக்கும் மேல் உள்ளன. இது துளிதுளியாக விழும் விசேஷ ட்ராப்பர் கொண்ட பிளாஸ்டிக் பாட்டிலில், எளிதில் பிடித்துக்கொள்ள வாகாக வருகிறது. ஆகையால் எத்தனை துளிகள் மாக்ஸிம் வேண்டுமோ, அத்தனை துளிகளை ஊற்றிக்கொள்ளலாம். எனவே, ஒரு துளிகூட வீணாகாது; பாட்டில் கை தவறி விழுந்து உடையுமோ என்னும் பயமும் இல்லை.




**எல்லாத் துணிகளுக்கும் பயனளிப்பது!**

மாக்ஸிம் எல்லாத் துணிகளுக்கும் புத்தம் புதிய வெண்மை, புதுமை மாறாத பளிச்சிடும் வெண்மை அளிக்கிறது— 'டெரீன்', 'டெரீன்'-காட்டன், நைலான், கம்பளி, பட்டு மற்றும் பருத்தித் துணிகளுக்கு. இது திரவ வடிவில் இருப்பதால், நீருடன் உடனே நன்கு கலந்து கொள்ளுகிறது. இது எந்தத் துணியின் மீதும் கறை ஏற்படுத்தாது; இதனால் திட்டு திட்டாக நீலம் படியாது.

**உபயோகிப்பது எளிது!**

வழக்கப்படி துணிகளை சலவை செய்யவும். இறுதியில் அலசும்போது, அரை வாளி சுத்த நீரில் 10-15 துளி மாக்ஸிம் சேர்க்கவும். அதில் துணிகளை 10-15 நிமிடங்கள் ஊறப் போடவும். பின்னர் மெதுவாகப் பிழிந்து, உலரப் போடுங்கள்.




100 மி.லி. மற்றும் 50 மி.லி. பிளாஸ்டிக் பாட்டில்களில் கிடைக்கிறது.

**ஒவ்வொரு பைசாவுக்கும் முழு மதிப்பைத் தருகிறது மாக்ஸிம்.**

GMM/3/75A

* Regd. TM : Geoffrey Manners & Co. Ltd.

கண்மணிப் பாப்பாவுக்கு மிகச் சிறந்ததென
நீங்கள் கண்டுகொண்ட பவுடர்...




# உங்களுக்கும் மிகச் சிறந்ததே







ஜான்ஸன்ஸ் பேபி பவுடர், உங்கள் அருமையறிந்து உருவாக்கிய அருமையான செல்வம்.
வேறெந்தப் பவுடரிலும் நீங்கள் அனுபவித்திராத சொகுசான இன்பம். மலர் மாரி பொழிந்து உடலைத்
தழுவும் மென்மை—உலகில் உன்னதமான இயற்கை நறுமணமேந்தி வரும் மென்மை.

இளந்தளிர் மேனிக்கென்றே ஈடிலாத் தூய்மையும் மென்மையுமே உருவான படைப்பு:
ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர். அதனால்தான் 75 ஆண்டுகளாகப் பாப்பா உலகின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக
விளங்குகிறது. அதனால் தான் உங்களுக்கும் இதுவே உகந்த பவுடர்.

# ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்

அருமைப் பாப்பாக்களின் ஆசை இதுவே:
நீங்களும் உபயோகியுங்கள் ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்

*1.
ஃப்ளோரைடு,
வாயில் உண்டாகும்
அமிலங்களால் பல்
எனுமல் கரைவ
தைக் குறைக்கிறது.

*2.
ஃப்ளோரைடு, பற்
சிதைவைத் தோற்று
விக்கும் 'ஆஸிட்
என்ஸைம்'களைத்
தீவிரமாகத்
தடுக்கிறது.

*3.
ஃப்ளோரைடு,
வளரும் பற்கள்
சிதைவுற்று
சொத்தை விழாமல்
பாதுகாக்கிறது.

*4.
ஃப்ளோரைடு,
வீக்கப் பற்களைப்
பளிங்குபோல்
கெட்டிப்
படுத்துகிறது.

# புதிய கோலினஸ் ஃப்ளோரைடு வாழ்நாள் முழுதும் பற்களுக்கு உறுதுணை!

கோலினஸ் ஃப்ளோரைடால் பற்களுக்குப் பூரண பாதுகாப்பு

கோலினஸ் ஃப்ளோரைடு பற்பசையில் கலந்துள்ள ஸோடியம்-மோனோ-ஃப்ளோரோ-ஃபாஸ்பேட் (எஸ்எம்எஃப்பி) வளரும் பற்கள் சிதைவுற்று சொத்தை விழாமலிருக்க அதிகப் பாதுகாப்பு அளிக்கிறது. ஏனெனில், எஸ்எம்எஃப்பி பல் எனுமலுடன் இணைந்து, பற்களைக் கெட்டிப் படுத்தி, பற்சிதைவு ஏற்படாமல் தீவிரமாக எதிர்க்கிறது.

கோலினஸ் ஃப்ளோரைடு பெரியவர்களுக்கும் கூடப் பயனுள்ளது.

கோலினஸ் ஃப்ளோரைடில் கலந்துள்ள எஸ்எம்எஃப்பி பல் எனுமலைத் தாக்கிப் பற்சிதைவைத் தோற்றுவிக்கும் 'பாக்டீரியா என்ஸைம்'களைத் தீவிரமாகத் தடுக்கவும் செய்கிறது.

எந்த சாதாரண பற்பசையும் சக்தி வாய்ந்த இத்தகைய அன்றாட பற்பராமரிப்பை உங்கள் குடும்பத்தாரின் பற்களுக்குத் தரமுடியாது. ஆனால் குளுமையான நறுமணச் சுவையுள்ள கோலினஸ் ஃப்ளோரைடு மட்டுமே இதைத் தருகிறது.

*1. ஃப்ளோரைடு அண்ட் ஹியூமன் ஹெல்த்', வர்ல்ட் ஹெல்த் ஆர்கனைஸேஷன், ஜெனிவா, 1970, பக்கம் 203-206.
*2. அதே சஞ்சிகை-பக்கம் 206-210.
*3. அதே சஞ்சிகை-பக்கம் 305-308.
*4. அதே சஞ்சிகை-பக்கம் 205.




**கோலினஸ் ஃப்ளோரைடை மிஞ்சுவது பல் வைத்தியர் அளிக்கும் பராமரிப்பு மட்டுமே.**

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

KF-1-74-1A

கல்கி

ராக்ஷஸ ஆனி 29
ஜுலை 13, 1975

''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.









ராஜி-ரோஸி






மாக்ஸ் ஃபாக்டர்
அளிக்கிறது ஆளவல்ல
ஆடவர்க்குப் புதிய
பாடி டால்க்
ஃபாக்டர் ஃபார் மென்



கல்கி

மலர் 34

இதழ் 50



தமிழ்த்திரு நாட்டினைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# எகிப்தில்...

எகிப்திலே ஒரு மிகப் பெரிய விஷயத்தைக் கண்டுபிடித்து விட்டார்கள்! 1975ம் ஆண்டின் அந்த மாபெரும் கண்டுபிடிப்பு என்னவென்றால் நாஸர் ஒரு சர்வாதிகாரியாக விளங்கினார் என்பதே! அதைப் புரிந்துகொள்ள இத்தனை நாட்கள் ஆகியிருக்கின்றன அவர்களுக்கு!

நாஸர் ஆட்சியின்போது அங்கே வாழ்ந்த ஒரு மேனாட்டு எழுத்தாளர், ''காக்டெய்ல்ஸ் அண்டு காமல்ஸ்'' என்று ஒரு நூல் எழுதினார். அதில், அவர் வீட்டில் பணியாற்றி வந்த வேலைக்காரி ஓடோடி வந்து மகிழ்ச்சி பொங்கச் சொல்கிறாள்: ''தெரியுமா சேதி? நாஸர் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் வோட்டுக்கள் பெற்று வெற்றி அடைந்திருக்கிறார்!''

இவ்வாறு கூறும் அந்தப் பணிப்பெண் சற்று யோசித்துவிட்டுத் தொடர்கிறாள்: ''அது சரி, உங்கள் நாட்டிலெல்லாம் தேர்தலில் ஒருவருக்கு மேற்பட்டவர்கள் அபேட்சகர்களாய் நிற்பார்களாமே? வாஸ்தவமா?''

பாமர மக்கள் எங்குமே இப்படித்தான் இருப்பார்கள். உண்மையான ஜனநாயகம் பற்றியும் கடவுளின் வரப்பிரசாதமாக மக்கள் பெற்றுள்ள உரிமைகளைக் குறித்தும் அவர்களுக்குப் படித்தவர்கள் தாம் எடுத்துச் சொல்ல வேண்டும்.

# பங்களாதேஷில்...

முஜிப் அரசு படிப்படியாகச் சர்வாதிகார ஆட்சி நோக்கிச் செல்கிறது. வங்கதேச விடுதலைப் போரின்போது அங்கே பத்திரிகைகள் பொதுமக்கள் அபிப்பிராயத்தை உருவாக்குவதில் பெரும் பணியாற்றின. பாகிஸ்தான் அதிகாரிகளின் கோபத்துக்கு ஆளாக நேரும் என்று தெரிந்திருந்தும் விடுதலைப் போரை ஆதரித்தன. ஆனால் விடுதலை பெற்று ஐந்து ஆண்டுகளுக்குள் பங்களாதேஷில் பத்திரிகைச் சுதந்திரம் பறிபோய்விட்டது. அரசாங்கம் வெளியிடும் செய்திகளும் அறிக்கைகளும் மட்டுமே பிரசுரமாகலாம்!

சென்ற ஆண்டு நெருக்கடி நிலைப் பிரகடனம் ஆனதிலிருந்து அரசியல் சாஸனத்தில் வழங்கப்பட்ட உரிமைகள் ஒவ்வொன்றாகப் பறிக்கப்பட்டு விட்டன. அரசியல் சாஸனத்தைத் திருத்தி, அரசியல் கட்சிகளை ஒழித்து ஏக கட்சி ஜனாதிபதி ஆட்சிக்கு வழிவகுத்தாகி விட்டது. ஜனாதிபதியின் உத்தரவுப்படி இருபது தினசரிகளையும் ஏராளமான வார இதழ்களையும் இழுத்து மூடியாகி விட்டது. உலகம் முழுவதிலுமுள்ள சுதந்திர மக்களின் கண்டனத்துக்கு உரியன இந்த நடவடிக்கைகள்.

# இந்தியாவில்...

நெருக்கடி நிலைப் பிரகடனமும் பத்திரிகைத் தணிக்கையும் அமுலுக்கு வந்ததைத் தொடர்ந்து, சமீபத்தில் ராஷ்டிரபதியின் மற்றுமோர் உத்தரவு பிறந்திருக்கிறது. இந்த உத்தரவுப்படி காரணம் ஏதும் காட்டாமலேயே யாரை வேணுமானாலும் காவலில் வைக்கும் உரிமையை மத்திய, மாநில அரசுகள் பெறுகின்றன.

இந்த உத்தரவு பிறந்ததற்கு மறுநாள் பிரதமர் இருபது அம்சப் பொருளாதாரத் திட்டம் ஒன்றை அறிவித்தார். இந்த இருபது அம்சத் திட்டத்தில் பதினைந்து அம்சங்களைத் தமிழகத்தில் நெருக்கடி நிலைப் பிரகடனத்துக்கு நீண்ட காலம் முன்பாகவே மாநிலத்துக்கு உள்ள அதிகாரங்களைக் கொண்டே அமுல்படுத்தியாகி விட்டது என்று நமது முதல்வர் கூறியுள்ளார்.

# வாழ்த்துகிறோம்!



நாட்டிலே நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்யப்பட்டுள்ள வேளையில், மத்தியில் பதவியிலுள்ள கட்சிக்கு மாறுபட்ட கட்சி மாநிலத்தில் ஆட்சி புரிந்தபோதிலும் நமது முதலமைச்சர் மத்திய - மாநில உறவுகள் சீர்கெடாத வகையிலும் அதே சமயம் எடுத்துக் கூறவேண்டிய உண்மைகளைக் கண்ணியமான முறையில் சொல்லியும் மிகுந்த சாணக்கியமுடன் செயலாற்றி வருகிறார். அவரை வாழ்த்த வேண்டிய தருணம் இது. வாழ்த்துவோம்.

# அறிவுச் சுடரும் ஞானத் தீபமும்

ஆம், அறிவுச் சுடரையும் ஞான தீபத்தையும் இவ்விதழ் மேலட்டையில் காண்கிறீர்கள். ஒருவர் திரு க. சந்தானம். மற்றொருவர் ராஜாஜி.

அண்ணலின் அழைப்பை ஏற்றுப் பலவித நிர்மாணப் பணிகளில் தீவிரமாக ஈடுபட்டதுடன் சுதந்திரப் போரிலும் குதித்து, உப்பு சத்தியாக்கிரகம், 1920— ஒத்துழையாமை இயக்கம், தனிநபர் சத்தியாக்கிரகம் போன்ற அனைத்திலும் பங்கு கொண்ட திரு க. சந்தானம் ஐந்து முறை சிறைவாசம் அனுபவித்தார். நேருஜியின் கரத்துடன் தமது கரம் விலங்கினால் இணைக்கப்படும் பாக்கியம் பெற்றார்.

சிறு வயதிலேயே கணக்கில் ஆர்வம் கொண்டு அதில் எம். ஏ. பட்டமும் பெற்றவர் பின்னால் பொருளாதாரப் பிரச்னைகளை அலசி ஆராய்ந்து நாட்டுக்குப் பயன் தரும் அரிய கருத்துக்களை வெளியிட்டார்.

எம். ஏ. பட்டத்துக்குப் பின் வழக்குரைஞர் பட்டமும் பெற்றவர். புனிதமான நமது ஒரிஜினல் அரசியல் சாஸனத்தை உருவாக்கப் பெருதவி புரிந்தார்.

பத்திரிகாசிரியர் என்ற முறையில் இந்தியன் எக்ஸ்பிரஸ், ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஆகிய நாளிதழ்களில் அரும் பணியாற்றிய திரு சந்தானம் பின்னால் ராஜாஜியின் கோரிக்கையை ஏற்று நமது சுயராஜ்யா இதழின் ஆசிரியராகவும் அமர்ந்து மக்களின் நியாயமான உரிமைகள், சுதந்திரங்களுக்காகப் பெரும் போர் நடத்தினார்.

சுதந்திர பாரதத்தில் மத்திய அமைச்சர் பதவி, கவர்னர் பதவி ஆகியன வகித்தாலும் ஆமாம் சாமியாக அவர் என்றுமே விளங்கியதில்லை. ஏன், ராஜாஜியிடமே கூடப் பல சமயங்களில் கருத்து வேற்றுமை கொண்டு வாதாடியிருக்கிறார்.

ஆங்கிலம், தமிழ், சம்ஸ்கிருதம் ஆகிய மொழிகளில் பாண்டித்தியம் பெற்றுள்ள திரு சந்தானம் எழுதியுள்ள நூல்கள் ஏராளம்.

ராஜாஜியின் அன்புக்கும் பெருமதிப்புக்கும் பாத்திரரான திரு க. சந்தானத்துக்கு எண்பது பிராயம் முடிவடைகிறது. பிறந்த நாளையொட்டி இரு தினங்கள் உண்ணாவிரதம் இருந்து அவர் பிரார்த்திக்கப் போகிறார்—தமக்காக அல்ல; நமக்காக, இந்த நாட்டுக்காக.

ராஜாஜியும் திரு க. சந்தானமும் நடத்திய போராட்டங்களைத் தொடர வேண்டிய நிலையில் இருக்கும் நாம் அதற்குரிய தீரத்தைப் பெற இறைவன் அருளட்டும்.

மேலட்டை வண்ணப் படம்:
கே. எஸ். ராமானுஜம்

ராஜாஜி சிந்தனை

## ஜீவனற்ற சுதந்திரம்

தனிமனிதனின் சுதந்திரம், தொழில் நடத்தும் சுதந்திரம், மனோதத்துவ ரீதியான சுதந்திரம் ஆகியன நமது முக்கிய குறிக்கோள்கள். மனித இனத்தின் மகிழ்ச்சிக்கு அடிப்படையானவை இவை. மகிழ்ச்சி இல்லையென்றால் தேசத்தின் சுதந்திரம் ஜீவனற்றதாகிவிடும்.

தனிமனிதர்கள் சுதந்திர உணர்வை அனுபவிக்கவில்லையானால் தேச சுதந்திரம் மாயை ஆகிறது. வெளியேயிருந்து ஒரு சக்தி தன்னுடைய சக்தியை அடக்கி ஆள்வது போன்று ஒரு பிரஜை உணர்வானேயானால் தான் காவலில் வைக்கப்பட்டிருப்பது போன்ற ஓர் உணர்வு அவனுக்கு ஏற்படுமேயானால் அப்போது தேச சுதந்திரம் அனுபவித்து மகிழும் விஷயமாக இராமல் வெறுமனே எழுதிப் பேசப்படுகிற காரியமாகி விடுகிறது.

பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நாம் பெற்ற தேச சுதந்திரத்துக்காக நடந்த போராட்டம் எவ்வளவு பெரிதோ, எவ்வளவு முக்கியமானதோ அதே அளவுக்கு முக்கியமானது, பெரிதானது நாம் இப்போது தனிமனிதன் உரிமைகளுக்காக மேற்கொள்ள வேண்டிய சுதந்திரப் போர். சுயராஜ்யா, ஜூலை 27, 1963

# என்ன சேதி?

## சுயராஜ்யா

சென்ற வாரக் கல்கியில் சுயராஜ்யா ஆசிரியர் திரு ஆர். வேங்கடராமன் எழுதிய ஒரு கட்டுரையின் மொழிபெயர்ப்பில் ஒரு பாரா தணிக்கையாளர்களால் நீக்கப்பட்டிருப்பதை நேயர்கள் கவனித்திருப்பார்கள்.

சுயராஜ்யாவிலும் மேற்படி பாரா நீக்கப்பட வேண்டும் என்று தணிக்கையாளர்கள் கருதினர். இதை ஆட்சேபித்து நமது சுயராஜ்யா பத்திரிகை தமிழக உயர்நீதி மன்றத்தில் 'ரிட்' மனு தாக்கல் செய்து 'ஸ்டே' உத்தரவு பெற்றிருக்கிறது.

## பூஜையில் விக்னங்கள் !

தஞ்சைப் பெரிய கோயில் கர்ப்பக் கிருகத்தினுள் தி. க. தோழர்கள் புகத் தீர்மானித்துள்ளார்கள். பரம ஆஸ்திகர்களான பக்தர்களுக்குக்கூட கர்ப்பகிருகத்தினுள் நுழைய அனுமதி கிடையாது என்னும்போது நாஸ்திக வாதம் புரிவோர் இப்படி ஒரு விஷப் பரீட்சையில் இறங்கிப் பார்க்க அவசியம் என்ன நேர்ந்துவிட்டது?

வழிபாடு சம்பிரதாயங்களை மாற்றுவது எனில் அந்த யோசனைகள் ஆஸ்திக உள்ளங்களிலிருந்துதான் வரவேண்டுமே தவிர நாஸ்திகவாதிகளிடமிருந்தல்ல.

முதல்வர் இதுபோன்ற காரியங்களை முளையிலேயே கிள்ளிவிடுவது நல்லது.

## விந்தை புரிந்த விந்தன்

சமீபத்தில் காலமான பிரபல எழுத்தாளர் திரு விந்தன் ஆரம்ப நாளில் கல்கி காரியாலயத்தில் கம்பாஸிட்டராகச் சேர்ந்தார். அவரது எழுத்தார்வம் அடக்க முடியாமல் வெளிப்பட்டுக் கல்கி அவர்களின் பாராட்டையும் பெற்றது. விரைவிலேயே உதவி ஆசிரியராகவும் அவரை நியமித்தார் கல்கி.



விந்தன் எழுதிய 'முல்லைக்கொடியாள்' என்ற நூலுக்குக் கல்கி முன்னுரை வழங்கிக் கௌரவித்தார். விந்தனின் 'பாலும் பாவையும்' ஓவியர் மணியத்தின் அழகு கொஞ்சும் சித்திரங்களுடன் கல்கியில் பிரசுரமாகிப் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது.

தனியே பத்திரிகை நடத்தியும் (மனிதன்) திரைப் படத் துறையில் புகுந்தும் (கூண்டுக் கிளி) பிரபலமடைந்தார் விந்தன். ஆனால் பணம் பண்ண முடியவில்லை. தினமணிக் கதிரில் அண்மைக் காலம் வரை உதவி ஆசிரியராகப் பணியாற்றினார்.

திரு விந்தனின் மறைவால் துயருற்றிருக்கும் அவரது குடும்பத்தினருக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## எழுத்தாளர்களுக்குப் பேரிழப்பு

திரு சோமசுந்தரத்தின் மறைவு தமிழ் எழுத்தாளர்களுக்குப் பேரிழப்பு என்று சொன்னால் அது சம்பிரதாய வார்த்தை அல்ல.

தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கத்தின் காரியதரிசியாக விளங்கி அதனை வளர்த்து நல்ல நிலைக்குக் கொண்டு வர அவர் எடுத்துக் கொண்ட பிரயாசைகள் கொஞ்ச நஞ்சமல்ல.



ஆரம்ப கட்ட இடையூறுகள், சிரமங்கள் எல்லாம் தாண்டிச் சங்கம் லாபகரமாக இயங்க ஆரம்பித்த தருணத்தில் 'இதைச் சாதிக்கத்தான் இத்தனை நாள் இருந்தேன்' என்று சொல்வது போல் பட்டென்று நம்மை விட்டுப் பிரிந்து போய்விட்டார். தமிழ் எழுத்தாளர்களை என்றென்றும் நன்றிக் கடன் பட்டவர்களாகச் செய்து விட்டார் திரு க. சோமசுந்தரம்.

கம்பன் கழகக் காரியதரிசியாக இருந்து பாமரன் முதல் பண்டிதன் வரை அனைவரையும் கம்பன் மீது காதல் கொள்ளச் செய்தார்.

''சொல்லோவியம்'', ''ஆயர்பாடி'' போன்ற அவரது நூல்கள் நமக்கு என்றும் அவர் நினைவை உணர்த்திக்கொண்டிருக்கும்.

## சரித்திரத்தை மதிப்போம்

ராஜாஜி ஹாலில் இருந்த பிரிட்டிஷ் கவர்னர்களின் ஓவியங்களை நீக்கித் தொல்பொருள் காட்சி சாலையில் வைத்து விட்டது தி.மு.க. அரசு. அதற்குப் பதில் அங்கே ஆங்கிலேயரை எதிர்த்த வீரர்களின் ஓவியங்களை மாட்டியிருக்கிறது.

ஆங்கிலேயரைப் போர்க்களத்திலும் சாத்வீக முறையிலும் எதிர்த்த உன்னத புருஷர்களைக் கௌரவிப்பதை நாம் தவறென்று கூறவில்லை, வரவேற்கிறோம். ஆனால் அப்படிக் கௌரவிப்பதை வேறு ஓர் இடத்தில் வைத்துக் கொள்ளக் கூடாதா?

ராஜாஜி அரங்குக்கும் அதிலுள்ள கவர்னர்களின் ஓவியங்களுக்கும் ஒரு சரித்திர முக்கியத்துவம் உண்டு. சரித்திர முக்கியத்துவம் உள்ள இடங்களை அப்படி அப்படியே பாதுகாக்க நாம் கற்க வேண்டும். நமக்குப் பிடிக்காத சரித்திரமென்பதால் சரித்திரத்தையே மதிக்காமல் இருக்கக் கூடாது.

முன்பு ராஜாஜி நீலன் சிலையை அப்புறப்படுத்தவில்லையா என்று இவர்கள் உடனே நம்மைத் திருப்பிக் கேட்பார்கள். நீலன் மிகப் பெரிய கொடுங்கோலனாய் விளங்கினான். அவன் சிலை நகரின் மையத்தில் இருப்பது அவமானம் எனக் கருதப்பட்டது. பொது ஜன எதிர்ப்பு அச்சிலைக்கு ரொம்ப இருந்தது. இவற்றை உத்தேசித்து ராஜாஜி அவ்வாறு செய்தார்.

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை 10-00 -- 11-00 | மணி அண்டு கோ., மெயின் ரோடு, |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை 3-00 -- 6-00 | பாம்பே ஹால் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளேஸ். |
| சேலம் | 16 | காலை 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை 3 - 5 | |
| ,, செவ்வாய்பேட்டை | 16 | மாலை 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை 3-00 -- 5-00 | M/s அல்லயன்ஸ் கம்பெனி, 156, ராமகிருஷ்ண மடம் ரோடு (மேற்கு மாட வீதி) மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை 10-00 -- 11 00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சிப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை 5-00 -- 6-00 | மீனாட்சி டொபாக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ண மெடிகல் ஹால், சன்னதி தெரு. |
| கடலூர் N T. | 22 | மாலை 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை 8-00 -- 11-00 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், தீபசாலை. |
| சிதம்பரம் | 23 | மாலை 3-00 -- 4-00 | பாரதீய ஆயுர்வேத அமிர்த நிலையம், கமலேஸ்வரன் கோயில் தெரு. |
| விருத்தாசலம் | 23 | மாலை 5-00 -- 6-00 | K. குப்புசாமி நாயுடு வீடு, கடைவீதி. |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளேஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை 9-11 | 14, V. கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம். |
| | | மாலை 3 - 5 | |

குறிப்பு : பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 4 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை,

கரூர் (போன் : 87)
திருச்சி ஜில்லா

# முருகப் பெருமான் (18)

### ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

(குமாரில பட்டர் நெருப்பில் அப்படியே அடங்கிக் குமாரஸ்வாமியாகி விட்டார். தர்ம சாஸ்திரத்துக்காக சரீரத்தையே பரித்தியாகம் செய்தார். இப்படிப்பட்ட மகான்கள் போட்ட தியாக அஸ்திவாரம் நம் வைதிக மதத்துக்கு இருப்பதால், நடுவாந்தரத்தில் எத்தனை நாஸ்திகமும், அவைதிகமும், 'சீர்திருத்தமும்' வந்தாலும் பயமே இல்லை.

இங்கே நம் ஞானசம்பந்தரும் ஒரு பெரிய அக்னி ஜோதிக்குள் சென்றுதான் மறைந்தார். அப்போது அவருக்கு வயசு பதினாறு தான். அந்தச் சின்ன வயசுக்குள் தமிழ்த் தேசம் முழுவதும் பரமத கண்டனம் செய்து வைதிக தர்மத்தை ஸ்தாபித்து விட்டார்.

ஆசார்யாளும் பதினாறுவது வயசிலேயே பாஷ்யங்களை எழுதிப் பூர்த்தி செய்துவிட்டார்; சரீரத்தையும் முடிக்க நினைத்தார். ஆனால் வியாசர், ''அவசரப்படாதீர்கள்! நீங்கள் எழுதின பாஷ்யங்களை நீங்களே உபதேசிக்க வேண்டும். தேசம் முழுக்க உள்ள மற்ற மதஸ்தரை நீங்கள் வாதில் ஜயிக்க வேண்டும். உங்களுடைய தரிசன பாக்கியத்தை ஜனங்களுக்கெல்லாம், அவர்களைத் தேடிப் போய், அநுக்ரஹிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார். அதனால் ஆசாரியாள் இன்னொரு பதினாறு வருஷம் மனுஷ்ய சரீரத்தை வைத்துக் கொண்டார்.

ஆசாரியாள் பரத கண்டம் முழுவதிலும் வைதிக புனருத்தாரணம் பண்ண வேண்டியிருந்ததால், (இவருடைய வேலையில் பாதியான பௌத்த மத கண்டனத்தை ஏற்கெனவே குமாரில பட்டரும், உதயனாசாரியார் என்ற நியாய சாஸ்திர நிபுணரும் செய்திருந்தும் கூட) முப்பத்திரண்டு வயசு மனுஷ்ய சரீரத்தில் இருக்கவேண்டியிருந்தது. தமிழ் தேசத்தில் மட்டும் இந்தக் காரியத்தைச் செய்த சம்பந்தருக்குப் பதினாறே வயசு போதுமாயிருந்தது. அப்பா அப்படி. பிள்ளை இப்படி! அப்பாக்காரர் பிரம்மச்சரியத்திலிருந்து நேரே சந்நியாசத்துக்குத் தாவி அவதார காரியத்தைச் செய்தார். பிள்ளையோ — அவரை 'ஆளுடை பிள்ளை' என்றே சொல்வார்கள். — பிரம்மச்சரிய ஆசிரமத்திலேயே மகத்தான வேத தர்ம ஸ்தாபனத்தைச் செய்து விட்டார்.

சம்பந்தருக்குப் பதினாறு வயதானபோது கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று பந்துக்கள் கேட்டுக் கொண்டார்கள். அம்பாளின் க்ஷீரத்தைப் பானம் பண்ணினவருக்கு எந்த ஸ்திரீயும் சாட்சாத் பரதேவதையாகத்தான் தெரிவாள். ''அம்மா! உன் க்ஷீர விசேஷம், உன் பிள்ளைகள் இரண்டு பேரும் காமமே இல்லாத குமாரர்களாகவே எந்நாளும் இருக்கிறார்கள்'' என்று ஆசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில் சொல்கிறார். (வடக்கே கார்த்திகேயர் கடும் பிரம்மச்சாரி. அங்கே வள்ளி தேவசேனை சமாசாரமே தெரியாது.) இப்படிப்பட்டவர்தான் ஞானசம்பந்தர். இருந்தாலும் அப்போது ஈசுவர சங்கல்பத்தை அறிந்து, அம்மாவுக்காகச் சரி என்று ஒப்புக் கொண்டார்.

திருநல்லூர் பெருமணத்தில் கல்யாணம் நடந்தது. பாணிக்கிரகணம் ஆயிற்றோ இல்லையோ, புதிதாகக் கல்யாணம் செய்து கொண்ட இளம் பத்தினியையும், இன்னும் வந்திருந்த அத்தனை பந்து மித்திரர்களையும் அழைத்துக் கொண்டு அந்த ஊர்க் கோயிலுக்குப் போனார் சம்பந்தர். கோயில் முழுவதும் ஒரே ஜோதிர் மயமாயிற்று. ஞான சம்பந்தர்,

> காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
> ஓதுவார் தமை நன்னெறிக்(கு) உய்ப்பது
> வேதம் நான்கினும் மெய்ப் பொருளாவது
> நாதன் நாமம் நமச் சிவாயவே

என்ற பஞ்சாட்சரப் பதிகத்தைக் கசிந்து கசிந்து கண்ணீர் மல்கிப் பாடிக்கொண்டே, அவர்கள் எல்லோரையும் ஜோதிக்குள் அனுப்பி விட்டுத் தாமும் பரமானந்தமாக அதற்குள் புகுந்து இரண்டறக் கலந்து விட்டார்.

அவர்கள் இவருக்குக் கல்யாணம் செய்து பந்தத்தில் மாட்ட நினைத்தால், ஞான சம்பந்தரான இவரோ அத்தனை பேருக்கும் பந்தத்தைப் போக்கி, கூண்டோடு கைலாசம் அனுப்பி விட்டார். இதுதான் பெரிய கல்யாணம்: திருநல்லூர் **பெருமணம்.**

பரமேசுவரனின் நேத்ர அக்கினியிலிருந்து வந்த சுடரே குமாரஸ்வாமி. திருப்புகழ் சொன்னபடி 'நெருப்பையும் எரிக்கும்' ஞானாக்னி அவர். அதனால் இரண்டு அவதாரங்களிலும் அக்கினிக்குள்ளேயே சொஸ்தமாகச் சென்று ஸ்கந்தலோகத்துக்குத் திரும்பினார்.

அவர் ஞானாக்கினியானாலும் இருதயத்தில் குளிர்ந்தவர். ஏனென்றால் ரொம்ப ஜல சம்பந்தமும் உள்ளவர். சரவணம் என்ற பொய்கையில்தான் சிவ தேஜஸ் முருகனுக ரூபம் கொண்டது. சரவணப் பொய்கை அம்பாளே. அப்பா நெருப்பாக இருக்க, அம்மா நீராக இருந்தாள். கங்கையும் அவருக்கு இன்னொரு மாதா. அதனால் 'காங்கேயன்' என்று பேர்.

எல்லாப் பெண்களும் அவருக்கு மாதா. ஷஷ்டிப் பெண்களுக்குப் பாலனானார். கார்த்திகைப் பெண்டிருக்குப் பிள்ளையாகிக் 'கார்த்திகேயர்' ஆனார். நட்சத்திரத்தில் ஆறாக இருப்பது கிருத்திகை; திதியில் ஆறாவது ஷஷ்டி; இவருக்கு ஆறு முகம்; ஆறு அக்ஷரம் கொண்ட 'ஷடக்ஷரி' இவருடைய மந்திரம். காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாத்சரியம் என்ற ஆறு பகைவர்களைக் கொன்று ஞானம் அருளும் ஆறு படை வீரர் அவரே. (தொடரும்)

---

1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள் கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.

# அருணா வெண்டுவோம்

"பக்தி, ஞான மார்க்கத்தில் நம்மை முன்னேற்றும் விதமாகச் சமீபத்தில் வெளியாகியுள்ள சில நூல்களைப்பற்றிக் கூறுங்கள்" என்று திரு ரா. கணபதி அவர்களிடம் கேட்டுக் கொண்டோம். பின்வரும் நூல்களைப் பற்றிச் சுருக்கமாக எழுதித் தந்த அவர், அடக்கம் காரணமாக, தாமே எழுதியுள்ள "நவராத்திரி நாயகி" என்ற நூலைப் பற்றி ஏதும் கூறாது விட்டு விட்டார்.

'காளி எனும் களிப்புத் தத்துவம்', 'இலக்குமி எனும் ஞான இலக்கு', 'சரஸ்வதி எனும் சர்வ சத்தியம்' என்ற மூன்று பாகங்களில் நவராத்திரி நாயகியின் கதைகளையும் தத்துவ விளக்கங்களையும் தருகிறார் திரு கணபதி. இதனைப் பதிப்பித்த வானதி பதிப்பகம் (சென்னை-17) திரு திருநாவுக்கரசு, "சொற்கோயில்" என்று நூலை வர்ணித்திருப்பது நூற்றுக்கு நூறு உண்மை. விலை. ரூ.20-00

— ஆசிரியர்





## ஸ்ரீ பத்மநாப சதகம், ஸ்யந்தனபுர வர்ணனப் பிரபந்தம்

ஸ்வாதித் திருநாளைப் பரம வைஷ்ணவரான வாக்கேயகாரர் என்றே பெரும்பாலும் உலகு அறிந்திருக்கிறது. ஆனால் அவர் கிருதிகள் மட்டுமின்றி வடமொழியில் அற்புதமான ஸ்துதியும், காவியமும் செய்திருக்கிறார் என்பதும், பக்தியை மட்டுமின்றிப் பரம அத்வைதத்தையே லட்சியமாகப் புகன்றிருக்கிறார் என்பதும் இந்நூலிலிருந்து தெரிய வருகிறது.

நூறு சுலோகம் கொண்ட "பத்மநாப சதகம்" "ஸ்யந்தனபுர வர்ணனப் பிரபந்தம்" ஆகிய பக்தி—ஞான தீபங்களான இவ்விரு நூல்களின் மூலத்தோடு, தமிழ் எழுத்தில் மூலத்தையும், பொருளையும், விரிவுரையையும் வழங்கியுள்ளார் மகாபண்டிதர்களான பேராசிரியர் பிரம்மஸ்ரீ வி. எஸ். வி குருஸ்வாமி சாஸ்திரிகள். நம்மாழ்வார் பிரபந்தங்களிலிருந்தும், புராண இதிகாசங்களிலிருந்தும் அவர் தந்துள்ள மேற்கோள்கள் பொன் மலருக்கு மேலும் மணமூட்டுகின்றன. மூல ஆசிரியர் எங்கெங்கே பாகவத, நாராயணீய நூல்களை நுணுக்கமாகப் பின்பற்றுகிறார், எங்கெங்கே விலகுகிறார் என்பதும் விளக்கப்பட்டுள்ளது.



*Pub: Sri Swathi Thirunal Kritis Publication Committee. Copies can be had from: Sri S. Vaidyanatha Iyer, Vazhuthacaud, Trivandrum-14. Price Rs. 15.*

# இருளை விலக்குவோம்!

## The Journal of Oriental Research

**Vols. XXXIV-XXXV (1964-65, 65-66)**



இந்தச் சிறப்பு மலரின் மூலம் டாக்டர் வி. ராகவன் அவர்கள் ஸ்ரீ காஞ்சி காமகோடி ஆசாரியப் பெருமானுக்கு அலாதியானதொரு சதாபிஷேக அஞ்சலி செலுத்தியிருக்கிறார் : பொருள் பொதிந்த அஞ்சலி. ஆசாரியாளையே போற்றி எழுதப்படும் கட்டுரைகள் நம் உள்ளத்தைத் தொடுவது உண்மைதான். ஆனாலும் சதாபிஷேக நாயகரைப் பொருத்த மட்டில், அவர் எந்த பாரதிய வித்யைக்குப் பிரதிநிதித்துவம் தாங்குகிறாரோ, அந்தப் பெரும் பண்பாட்டினைக் குறித்த அரிய ஆராய்ச்சிகளே அவரது உள்ளத்துக்கு உவகை ஊட்டுவனவாகும். எனவே, ராகவன் அவர்கள் ஆசாரியாளைப் பற்றியதாக இல்லாமல், நம் கலாசாரம், வேதாந்



தம் இவை குறித்து அவர்களுடன் தொடர்பு கொண்ட இருபத்தியோர் அயல்நாட்டு அறிஞர் பெரு மக்களின் கட்டுரைகளைத் தொகுத்து இந்நூலாக வழங்கியிருப்பதிலும் தனியானதோர் அழகும், பெருமையும் இருக்கத்தான் செய்கிறது.

1972 முடிய ஆசாரிய ஸ்வாமிகள் ஆற்றியுள்ள அரும் பணிகளை டாக்டர் ராகவன் நாட்குறிப்பு உருவத்தில் அநுபந்தமாகத் தந்திருக்கிறார். அப்பப்பா, குருநாதன் செய்துள்ள தர்மத் தொண்டுதான் எத்தகைய மகாசமுத்திரமாக விரிந்திருக்கிறது !

*Pub : The Kuppuswami Sastri Research Institute, Madras-14. Price Rs. 16.*

## Manache Sloka & Atmarama

பாரத நாட்டின் ஞான பக்திச் செல்வர்களுள் ஏற்றம் கொண்டதோர் இடம் பெற்றவர் ஸ்ரீ சமர்த்த ராமதாஸர். சத்ரபதி சிவாஜியின் குருவாக விளங்கி, அம் மாமன்னனைக் கொண்டு நாட்டில் சநாதன தர்ம வாழ்வைப் புத்துயிர் பெறச் செய்தவர். அவர் லளிதமான மராட்டி மொழியில் அருளிய 'மனசே சுலோகம்', 'ஆத்மாராம' என்ற இரு நூல்களின் மூலத்தையும், ஆங்கிலப் பொருளாக்கத்தையும் விளக்கத்தையும் இங்கே பெற்றுப் பயனடைகிறோம். ராம பக்தி என்ற ஸகுண உபாஸனை மூலமே அத்வைத நிர்குண அநுபவம் சித்திப்பதை ஸ்ரீ சமர்த்தராமதாஸர் தமது பிரத்யட்ச உதாரணத்தைக் காட்டி விவரிக்கிறார். உச்சமான உணர்வுகளில் வாசகர்களை முழுக்கும் உத்தம நூல்.

*Translated by P. Suryanarayana. Copies can be had from N. Narasimhan, P.B.No. 1212. Cochin-11. Kerala. Rs. 4.50.*





ஆசிரியர்: உனக்குத் தெரியுமா சேகர், முட்டாள்கள் தான் சில நேரங்களில் அறிவாளிகளிடம் பதில் சொல்ல முடியாதபடி சில கேள்விகளைக் கேட்பார்கள்.

மாணவன்: அப்படியா? எனக்கு இப்போது தான் புரிகிறது. நான் ஏன் பரீட்சையில் அடிக்கடி ஃபெயில் ஆகின்றேன் என்று! - சரஸ்வதிபத்திரிகை

---

## ஸ்ரீபகவத்கீதை
### (இரண்டு பாகங்கள்–தமிழ் உரையுடன்)

முதன் முதலாக 1884ம் ஆண்டில் பிரசுரமான இதன் விசேஷம் யாதெனில் இது ஒரு குறிப்பிட்ட சம்பிரதாயத்தை மட்டும் பின்பற்றாமல், சங்கரர், ராமானுஜர், மத்வர், ஸ்ரீதரர், ராகவேந்திரர் ஆகிய இவரின் பாஷ்யங்களையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டு விதேயாகும். உரையாசிரியரான வில்லவரம் பல் குப்புஸ்வாமி அய்யர் அவர்கள் இவற்றில் எந்த ஒரு மரபையும் நிலைநாட்ட முற்படாமல் வெறுமே அத்வைத, த்வைத, விசிஷ்டாத்வைத கோணங்களை நம் முன் வைக்கிறார்.

ஸ்ரீ காஞ்சிப் பெரியவரவர்கள் இந்த நூலை மீண்டும் பதிப்பிக்குமாறு ஆக்ஞையிட்டதை யொட்டி, தொண்ணூறு ஆண்டுகளுக்குப்பின் இன்று, குப்புஸ்வாமி அய்யரின் வம்சத்தில் வந்துள்ள அவரது பெயரையே கொண்ட வழித் தோன்றல் இரு பாகங்களாக வெளியிட்டிருக்கிறார். பெரியவாள் பணித்தது என்றால் அதற்கு ஒரு விசேஷப் பொருளும், பயனும் இருக்கத்தான் வேண்டும்.

(கிடைக்குமிடம்: *B. G. Paul & Co., 4, Francis Joseph Street, Madras-1. Price: (Two Parts) Rs. 10.00*

## Invitation to Indian Philosophy

இந்நாட்டில் விளைந்துள்ள அத்தனை சமய சம்பிரதாயங்களின் ஆதாரக் கொள்கைகள் பற்றியும் நாம் தெள்ளத் தெளிய அறிந்து கொள்ள உதவும் தத்துவக் களஞ்சியமான நூலை டாக்டர் டி. எம். பி. மகாதேவன் அவர்கள் வழங்கி, நமது நீங்காத நன்றிக்குப் பாத்திரமாகியிருக்கிறார். அவரது அறிவின் தெளிவும் மொழியின் எளிமையும் சேர்ந்து கற்குண்டான தத்துவங்களையும் கற்கண்டாக இனிக்கத் தருகின்றன.

வெளியீடு: *Arnold - Heinemann Publishers (India) Private Ltd., AB-9, Safderjung Enclave, New Delhi-110016. Price: Rs. 50.00.*

## ஸ்ரீரமண சந்நிதி முறை

படிப்பவர்களின் உட்புகுந்து உயிரை உருக்கி மெய்ஞ்ஞானம் ஊட்டுவதில் திருவாசகத்துக்கு இணை இல்லை. திருவாசகத்தை அப்படியே அடியொற்றி ஸ்ரீரமண மகரிஷிகளின் சந்நிதி முறையை ஆக்கினார் முருகனார். ஆனால் இது 'காப்பி' அடிக்க மாதிரியோ, 'இமிடேஷன்' சரக்காகவோ இல்லை. பகவான் ரமணரின் அருட்பிரவாகத்தில் பல்லாண்டுகள் ஆழமூழ்கிய கவி, காவிய நாயகரின் பிரம்ம சாட்சாத்கார அமைதி, விலாஸிநோத அன்பு இரண்டிலும் நம்மைத் தோய்த்தெடுக்கிறார்.

வெளியீடு: ஸ்ரீ ரமணாச்ரமம், திருவண்ணாமலை, வ. ஆ. மாவட்டம்; விலை: ரூ. 10.

## Dilip

ஸ்ரீ ராமன் பிறந்த குலம் ரகு வம்சம் என்றே சிறப்பிக்கப்படுகிறது எனில், அந்த ரகுவைப் பிறப்பித்த தந்தை என்ற பெருமை திலீபனைச் சேருகிறது. தர்மம், வைதிகம், தயை, தியாகம் முதலிய சகல நற்குணங்களுக்கும் இருப்பிடமாக மகாகவி காளிதாஸர் திலீபனைச் சித்திரிக்கிறார் தமது 'ரகுவம்ச' மகாகாவியத்தில். திலீபன் உருவகித்த பண்புகளை வளர்ப்பதற்கு ஒரு பத்திரிகை வேண்டும் என்று ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள் திருவுள்ளம் பற்றினார். பம்பாய் அன்பர் சிலரிடம் அருளாணை பிறப்பித்து, 'திலீப்' என்ற இருமாதங்களுக்கு ஒரு முறை வெளியாகும் ஆங்கிலப் பத்திரிகையை நடத்தச் செய்திருக்கிறார். இதை ஒரு 'டிரஸ்ட்' மூலம் நிர்வகிக்கப் பணித்து, அந்த நிறுவனத்துக்குத் திலீபனின் தர்மபத்னியான 'சுதக்ஷிணை'யின் பெயரையே சூட்டியிருக்கிறார் ஸ்ரீ ஆசாரியப் பெருமான். 'சுதக்ஷிணை'க்குத் தரும் சந்தா தர்ம வேள்விக்குத் தருகிற தக்ஷிணை என்று கொள்ள வேண்டும்.

*Published by Sudhakshina Trust, C/o. Colour Publications Private Ltd., 126-A, Dhuruwadi off Dr. Nariman Road, Bombay-400025 Annual Subscription Rs. 15. Single Copy Rs. 3.*

## Sri Krishna The Lord of Guruvayur

குருவாயூர் ஆலய கோபுர வாசலிலிருந்து கருவறை வரையிலான நுணுக்கமான வர்ணனைகள்; ஆங்காங்குள்ள சந்நிதிகளையும் தேவதைகளையும் பற்றிய விளக்கங்கள்; இங்கு அப்பன் எழுந்தருளிய புராண வரலாறு; கோயில் வளர்ந்த சரித்திர வரலாறு; ஆலயத்தின் சிற்ப முறை பற்றிய தகவல்கள்; நித்திய–நைமித்திக வழிபாடுகளையும் வேண்டுதல்களையும் பற்றிய சமாசாரங்கள்; இவை எல்லாவற்றுக்கும் மேலாக 'குருவாயூர்' என்ற மாத்திரத்தில் நம் நினைவில் முந்தி வரும் 'நாராயணீய' நூலைப் பற்றிய விவரங்கள்; அதற்கும் மீதாக சாட்சாத் ஸ்ரீ குருவாயூரப்பனின் எல்லையிலா லீலாப் பிரபாவத்தில் நம் உள்ளத்தை உருக்கக்கூடியதான சில எடுத்துக்காட்டுகள் — இப்படி, சகல விஷயங்களையும் 150 பக்கங்களுக்குள் சுருக்கமாகவும், சுவையாகவும் கூறும் நூல்.

*Author K. R. Vaidyanathan. Publishers Bharatiya Vidya Bhavan, Bombay-400007. Price Rs. 6.*

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி மோட்டார்



இன்றே காணமுடிந்தது இன்ப நாள் இதனை.

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி மோட்டார்

வெற்றி மிகு ஜோடி







அதி நவீனத் தொழில்நுட்ப அறிவும், ஆண்டாண்டு கால அனுபவமும் ஜோதி எலக்ட்ரிக் மோட்டார்களை உற்பத்திசெய்ய வழி கோலின; சிறப்பாக வழிகாட்டிய வல்லுனர்களின் உதவியும், கடுமையான பரிசோதனைகளும் அதற்கு உறுதுணை புரிந்தன. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தினால் உருவாக்கப்பட்ட இம் மோட்டார், வேறெந்த மோட்டாரிலும் கிட்டாத அளவுக்கு, பழுதில்லாப் பணியை வழங்குகிறது. அடிக்கடி பழுதுபார்க்கும் தொல்லையிலிருந்து விடுவிக்கிறது.



**ஜோதி லிமிடெட்** பரோடா 390 003

*quality is our creed.*

everest/25/JY-4m

கிளை: எயர் லைன்ஸ் ஹோட்டல், 177/179 மவுண்ட் ரோடு, சென்னை. போன்: 85007.
வியாபாரிகள்: ராஜும் & கோ., சதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், பெண்ணாடம்; ராஜா டிரேடிங் கோ., அருணாசல ஆசாரித்தெரு, சேலம்; ஆட்டோமேட்டிக் பம்பு ஸ்பெஷலிஸ்ட்ஸ், 4 பாண்டி பஜார், சென்னை; முருகன் ஆட்டோமேட்டிக்ஸ், காளியம்மன் கோவில் தெரு, உசிலம்பட்டி; பிரீமியர் இண்டஸ்ட்ரீஸ், செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை.




# லக்ஸ் ஸுப்ரீம்

## அதனுள்ளேயே அடங்கியுள்ளது ப்யூடி க்ரீம்!

உங்கள் சருமத்தைப் பட்டுப்போன்று வழவழப்பாக வும், மிகுந்த அழகுடனும் விளங்க வைக்க லக்ஸ் ஸுப்ரீம் ஒரு புதிய சாதனமாகும். ஏனென்றால் அது ஒன்றில்தான் ப்யூடி க்ரீம் அடங்கியுள்ளது.

நிறைந்த அதன் நுரையின் நடுவில் ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தை நீங்கள் உண்மையாகவே உணருவீர்கள்.

லக்ஸ் ஸுப்ரீமின் நுரை உங்கள் சருமத்திற்கு மென்மையூட்டும்போதே, உங்கள் தேகத்திலிருந்து அரிய ஒரு நறுமணம் வீசுவதை அனுபவிக்க முடியும். அதுதான் லக்ஸ் ஸுப்ரீமுக்கே உரித்கான ஒரு விசேஷ குணம்.

**லக்ஸ் ஸுப்ரீம் உபயோகித்து உங்கள் எழில் மலர்வதை உணருங்கள். ப்யூடி க்ரீம் அடங்கிய ஒரே சோப்பு**

HT.HLLS.8849



# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

பத்தொன்பதாம் அத்தியாயம்

## அன்னையின் ஆசி

மறுநாள் பாண்டியன் நெடுமாறன் புவன மகாதேவியிடம் விடைபெற்றுக் கொள்வதற்காக அந்த மூதாட்டியின் அரண்மனைக்குச் சென்றான்.

மகேந்திர பல்லவரின் பட்டமகிஷி அகமகிழ்ந்து முகமலர்ந்து நெடுமாறனை வரவேற்றாள்.

அச்சமயம் அங்கேயிருந்த மங்கையர்க்கரசி வெளியேற யத்தனித்த போது, ''குழந்தாய் ! ஏன் போகிறாய்? பாண்டிய குமாரனுடன் நான் பேசக்கூடிய இரகசியம் ஒன்றும் இல்லை'' என்று கூறி அவளைப் போகாமல் நிறுத்தினாள்.

பிறகு நெடுமாறனை உட்காரச் சொல்லி, ''அப்பனே ! எல்லா விவரமும் அறிந்து கொண்டேன். வானமாதேவி நேற்றிரவே வந்து கூறினாள். இருந்தாலும் அந்த உத்தமியின் மனத்தை நீ ரொம்பவும் கலக்கிவிட்டாய் !'' என்றாள். நெடுமாறனுடைய மௌனத்தைக் கண்டு, ''நீ காஞ்சிக்கு வந்தது முக்கியமாக எனக்குத்தான் பெரிய அநுகூலமாகப்போயிற்று. இந்தப் பெண்ணைத் தகுந்த வரனுக்கு மணம் செய்து கொடுப்பதாக இவளுடைய தந்தைக்கு நான் வாக்குக் கொடுத்திருந்தேன். அது விஷயத்தில் நான் பிரயத்தனம் செய்ய இடமில்லாமல் நீங்களே முடிவு செய்து கொண்டு விட்டீர்கள். எனக்கு அது விஷயமான பொறுப்பு இல்லாமல் போயிற்று'' என்றாள் புவனமகாதேவி.

''தாயே ! அப்படிச் சொல்ல வேண்டாம். தங்களுடைய சுவீகாரப் பெண்ணின் கல்யாண விஷயமாகத் தங்களுடைய பொறுப்புத் தீரவில்லை. தாங்கள் பிரயத்தனம் செய்வதற்கு இடமிருக்கிறது. கொஞ்சம் மங்கையர்க்கரசியைக் கேட்டு விடுங்கள், அவள் என்னை மணந்து கொண்டு தங்களுடைய பொறுப்பைத் தீர்த்து வைக்கப் போகிறாளா என்று !''

இவ்விதம் நெடுமாறன் சொன்னதும், புவனமகாதேவி, ''அவளைப் புதி





தாய்க் கேட்பானேன் ? ஏற்கனவே எல்லாம் என்னிடம் சொல்லியாயிற்று'' என்று கூறிக் கொண்டே திரும்பிப் பார்த்தாள்.

திரும்பிப் பார்த்த தேவி, மங்கையர்க்கரசியின் கண்களில் கண்ணீர் ததும்பி நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு, ''இது என்ன ? குழந்தைகள் அதற்குள்ளே ஏதேனும் சண்டை போட்டுக் கொண்டீர்களா ?'' என்று நெடுமாறனைப் பார்த்து வினவினாள்.

''சாதாரணச் சண்டை போடவில்லை, அம்மா ! பெரிய யுத்தம். வாதாபி யுத்தத்துக்கு நான் போகவில்லையே என்று இங்கே அரண்மனைக்குள்ளேயே யுத்தம் ஆரம்பித்தாயிற்று. இவ்வளவு தூரம் என்னைப் பைத்தியம் பிடிக்க அடித்துவிட்டு, என் சொந்தத் தமக்கையே எனக்கு விஷம் கொடுத்துக் கொல்ல நினைக்கும் வரையில் கொண்டு வந்துவிட்டு, இப்போது என்னை மணந்து கொள்ள மாட்டேனென்று சொல்லுகிறாள்! இதன் நியாயத்தை நீங்களே கேளுங்கள்!'' என்றான் நெடுமாறன்.

புவனமகாதேவி மங்கையர்க்கரசியைப் பார்த்தாள். அநாவசியமான தடையை இவர்களே ஏற்படுத்திக் கொண்டார்கள் என்று தெரிந்து கொண்டாள். ''குழந்தாய் ! பாண்டிய குமாரன் சொல்வது வாஸ்தவமா? உன்னைத் தேடி வந்திருக்கும் மகத்தான பாக்கியத்தை நீயே வேண்டாமென்று மறுதளிக்கிறாயா?'' என்று கேட்டாள்.

மங்கையர்க்கரசி விம்மிக் கொண்டே வந்து அவள் பாதத்தில் நமஸ்கரித்து, '' அம்மா ! இவருக்கு நான் என் உள்ளத்தைப் பறி கொடுத்து இவரை என் பதியாக வரித்தபோது இவர் சமணர் என்பது எனக்குத் தெரியாது'' என்று சொல்லி மேலே பேச முடியாமல் தேம்பினாள்.

நெடுமாறன் பெருங் கவலைக்குள்ளானான். '' இது என்ன? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே ?'' என்று அவன் திகைத்து நிற்கையில், புவனமகாதேவி அவனைப் பார்த்து, ''அப்பனே ! இந்தக் குழந்தை சைவக் குலத்தில் பிறந்தவள் – சிவபெருமானையும் பார்வதியையும் வழிபடுகிறவள் என்று உனக்குத் தெரியுமல்லவா ? அதற்கு ஒன்றும் தடை செய்ய மாட்டாயே ?'' என்று கேட்டாள்.

நெடுமாறன் அந்தச் சங்கடமான நிலையிலிருந்து விடுபட வழி கிடைத்தது என்ற உற்சாகத்துடன், ''அம்மா! அப்படிப்பட்ட மூர்க்கன் அல்லன் நான். சமண சமயத்தில் நான் பற்றுக் கொண்டவனானாலும் சைவத்தை வெறுப்பவன் அல்லன். என் ஆருயிர் நண்பனான குலச்சிறை அபாரமான சிவ பக்தன். நான் சுரமாய்க் கிடந்தபோது இங்கே வந்து திருநாவுக்கரசர் பெருமானிடம் திருநீறு வாங்கி வந்து எனக்கு இட்டான். அதை நான் ஆட்சேபிக்கவில்லை. மதுரையில் இருக்கும்போது அவன் காலை, மத்தியான்னம், மாலை

மூன்று வேளையும் ஆலயத்துக்குச் சென்று மீனுக்ஷி அம்மனையும் சுந்தரேசுவரரையும் தரிசித்துவிட்டு வருவான். அம்மாதிரியே இவனும் செய்யட்டும். நான் தடை சொல்லவில்லை!'' என்றான். அப்போதுதான் மங்கையர்க்கரசியின் முகம் முன்போல் பிரகாசம் அடைந்தது.

அந்த அபூர்வமான காதலர் இருவரையும் புவனமகாதேவி தன் எதிரில் தம்பதிகளைப் போல் நிற்கச் செய்து ஆசி கூறி வாழ்த்தினுள்.

இன்னும் சிறிது நேரம் மேலே நடக்க வேண்டிய காரியங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்துவிட்டு, ''குழந்தாய்! நீ கவலைப்படாதே! நீ சில நாட்களாக அடிக்கடி கண்டு வரும் கனவைப் பற்றிச் சொன்னுயல்லவா? உன் கனவு நிச்சயம் பலிக்கும். நெடுமாறன் சிவபக்தியில் சிறந்தவனுவான். அந்தப் புண்ணியத்தை நீ கட்டிக் கொள்வாய்!'' என்று ஆசி கூறினுன்.

* * *

நெடுமாறனிடமும் மங்கையர்க்கரசியிடமும் இந்தக் கதையைப் பொறுத்த வரையில் நாமும் இப்போது விடை



பெற்றுக் கொள்ள வேண்டும். அப்படி விடைபெறுமுன், நெடுமாறன் விஷயத்தில் புவன மகாதேவியின் வாக்கு முழுவதும் உண்மையாயிற்று என்பதை மட்டும் குறிப்பிட விரும்புகிறோம். பிற்காலத்தில் நெடுமாறன் ஸ்ரீ சம்பந்தப் பெருமானின் பேரருளினால் சிறந்த சிவ நேசச் செல்வனானான். யுத்தம் சம்பந்தமான அவனுடைய கொள்கையும் மாறுதல் அடைய நேர்ந்தது.

இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பிறகு, வாதாபிப் புலிகேசியின் மகன் விக்ரமாதித்தியன் தென்னாட்டின் மீது படையெடுத்து வந்து பாண்டிய நாட்டை அடைந்த போது நெல்வேலிப் போர்க்களத்தில் அவனைப் பாண்டியன் நெடுமாறன் முறியடித்துத் தமிழகத்தின் சரித்திரத்தில் அழியாப் புகழ் பெற்றான்.

## இருபதாம் அத்தியாயம்

# நிலவில் நண்பர்கள்

**வா**னக் கடலில் மிதந்த பூரண சந்திரன் பால் நிலவைப் பொழிந்து இந்த மண்ணுலகத்தை மோகனப் பொன்னுலகமாகச் செய்து கொண்டிருந்த இரவில் வடபெண்ணை நதியானது அற்புதக் காட்சியை அளித்துக் கொண்டிருந்தது.

முதல் நாளிரவு அதே நேரத்தில் அந்த நதியைப் பார்த்தோமானால் சலசலவென்ற இனிய ஓசையோடு அம் மாநதியில் ஓடிய தண்ணீர்ப் பிரவாகம் உருக்கிய வெள்ளியைப் போல் தகதக வென்று பிரகாசிப்பதையும், நாற்புறமும் ககன வட்டம் பூமியைத் தொட்டு ஒன்றுகும் வரம்பு வரையில் பூரண அமைதி குடிகொண்டிருப்பதையும் கண்டிருப்போம். அந்த இயற்கை அமுதக் காட்சியின் இன்பத்தில் மெய்ம்மறந்திருப்போம். பிரவாகத்தையொட்டி விரிந்து பரந்து கிடக்கும் வெண் மணலிலே படுத்துக்கொண்டு, ''ஆகா! இது என்ன அற்புதமான உலகம்? இவ்வுலகத்திலே ஒருவன் அடையக்கூடிய ஆனந்தம் சொர்க்க லோகத்திலேதான் கிடைக்குமா?'' என்று வியந்திருப்போம்.

ஆனால், இன்றிரவோ அந்த வட பெண்ணை நதித் துறையானது மகத்தான அல்லோலகல்லோலத்துக்கு உள்ளாகியிருந்தது. கணக்கற்ற யானைகளும் குதிரைகளும், ரதங்களும், வண்டிகளும் அந்த நதியை அப்போது கடந்துகொண்டிருந்தன. யானைகள் அணிந்திருந்த தங்க முக படாங்களும், அவற்றின் தந்தங்களுக்கு அணிந்திருந்த வெள்ளிப் பூண்களும், இயற்கையிலேயே அழகுடைய புரவிகளுக்குப் பூட்டியிருந்த நானாவித ஆபரணங்களும், ரதங்களின் தங்கத் தகடு வேய்ந்த விமானங்களும் வெண்ணிலவில் பளபளவென்று ஜொலித்தன.

யானைகள், குதிரைகள் எல்லாம் வரிசை வரிசையாக ஏக காலத்தில் நெடுந் தூரத்துக்கு நெடுந் தூரம் நதியை அடைத்துக் கொண்டு நீர்ப் பிரவாகத்தைக் கடந்தபோது ஏற்பட்ட ஓசை பெருங் காற்று அடிக்கும்போது அலை வீசிக் குமுறும் சமுத்திரத்தின் பேரிரைச்சலை ஒத்திருந்தது.

அக்கரையில் கண்ணுக்கெட்டிய மட்டும் காலாட் படையைச் சேர்ந்த வீரர்கள் காணப்பட்டனர். அவர்களுடைய கையிலே பிடித்திருந்த கூரிய வேல்கள் அசைந்தபோதெல்லாம் மின்வெட்டின் ஒளி தோன்றிக் கண்ணைப் பறித்தது. அந்த வீரர் கூட்டத்துக்கு இடையிடையே ஆயிரக்கணக்கான ரிஷபக்கொடிகள் இளங்காற்றில் பறந்து படபட வென்று சப்தித்துக் கொண்டிருந்தன.

இந்தக் கரையில் நதித் துறைக்குச் சற்றுத் தூரத்தில் ஒரே ஒரு கூடாரம் மட்டும் காணப்பட்டது.

கூடாரத்துக்குப் பக்கத்தில் புல் தரையில் விரித்திருந்த ரத்தினக் கம்பளத்தின் மேல் யாரோ நாலு பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கையைத் தட்டிக் கூப்பிட்டால் கேட்கக்கூடிய தூரத்தில் பத்துப் பன்னிரண்டு வீரர்கள் கையில் நீண்ட வேல்களுடனும், இடையில் செருகிய வாள்களுடனும் சர்வ ஜாக்கிரதையுடன் காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். இதிலிருந்து இரத்தினக் கம்பளத்தில் உட்கார்ந்திருப்பவர்கள் பெரிய அந்தஸ்து படைத்த முக்கியஸ்தர்கள் என்று ஊகிக்கலாம்.

அருகில் சென்று பார்த்தோமானால், நமது ஊகம் உண்மை என்பதைக் காண்போம். அந்த நால்வரும் மாமல்ல சக்கரவர்த்தி, சேனாதிபதி பரஞ்சோதி, வேங்கி அரசன் ஆதித்தவர்மன், ஒற்றர் தலைவன் சத்ருக்னன் ஆகியவர்கள்தாம்.

* * *

**வே**ங்கி அரசன் ஆதித்தவர்மன் மாமல்லருடைய தாயாதி சகோதரன், அதாவது சிம்மவிஷ்ணு மகாராஜாவின் சகோதரன் வம்சத்தில் வந்தவன். இந்த வம்சத்தினர் வேங்கி சாம்ராஜ்யத்தின்

---



வட பகுதியில் கோதாவரிக்கு அப்பாலுள்ள பிரதேசத்தைச் சுதந்திரச் சிற்றரசர்களாக ஆண்டு வந்தார்கள்.

சளுக்க சக்கரவர்த்தி காஞ்சியின் மீது படையெடுத்து வந்தபோது, ஆதித்தவர்மன் பல்லவ சக்கரவர்த்தியின் உதவிக்கு வர முடியாதபடி இடையில் புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனனால் வழிமறிக்கப்பட்டான். விஷ்ணுவர்த்தனன் வேங்கியின் புராதன இராஜ வம்சத்தை நிர்மூலம் செய்து தாம் சிம்மாசனம் ஏறியதும், ஆனால், புலிகேசி தென்னாட்டிலிருந்து வாதாபிக்குத் திரும்பி வருவதற்குள் விஷ்ணுவர்த்தனன் உயிர் துறக்க நேர்ந்ததும் நேயர்கள் அறிந்தவை.

விஷ்ணுவர்த்தனனுடைய ஆட்சியையும் ஆயுளையும் அகாலத்தில் முடிவு செய்யக் காரணமாயிருந்தவன் ஆதித்தவர்மன்தான்.

ஆனால், சில வருஷங்களுக்குப் பின்னர் மீண்டும் புலிகேசியின் பெருஞ்சைனியம் வேங்கியைக் கைப்பற்ற வந்தபோது, ஆதித்த வர்மன் தன்னுடன் மிச்சம் இருந்த வேங்கிச் சைனியத்துடனே தென் திசை நோக்கிப் பின்வாங்கி மீண்டும் தாக்கச் சந்தர்ப்பத்தை நோக்கிக் காத்திருந்தான்.

மாமல்லர் மாபெருஞ் சைனியத்தோடு வாதாபியின் பேரில் படையெடுத்தபோது, ஆதித்தவர்மனும் அவரோடு சேர்ந்து போருக்குப் புறப்பட்டான்.

சேனாதிபதி பரஞ்சோதி பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால் தாம் இதே வடபெண்ணையின் அக்கரையில் புலிகேசியின் சேனா சமுத்திரத்தைப் பார்த்துப் பிரமிப்படைந்தது பற்றியும், மகேந்திர பல்லவர் மாறுவேடம் பூண்டு தம்மைப் பின்தொடர்ந்து வந்து புலிகேசியின் கண்ணெதிரே தம்மை விடுதலை செய்தது பற்றியும் விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

மற்ற மூவரும் அதிசயத்தோடு கேட்டுக் கொண்டிருந்தனர். மூவரிலும் ஆதித்தவர்மன் மிகவும் அதிசயப்பட்டான். அவனுக்கு அந்த விவரங்கள் எல்லாம் புதியனவாக இருந்தன.

"ஆகா! அந்த விசித்திரசித்தரை நேரில் பார்க்கும் பாக்கியம் இந்தக் கண்களுக்குக் கொடுத்து வைக்கவில்லையே?" என்று வருந்தினான்.

அப்போது மாமல்லர் சொன்னார்:

"இலங்கை இளவரசன்கூட அடிக்கடி இவ்விதம் கூறி வருத்தப்படுவான். என் தந்தை என்பதற்காக நான் பெருமையடித்துக் கொள்ளவில்லை. ஆனாலும் அவரைப் பார்ப்பதே ஒரு பாக்கியந்தான். அவருடன் நெருங்கிப் பழகுவதற்கோ பல ஜன்மங்களிலே, பாக்கியம் செய்திருக்க வேண்டும். மூன்று வருஷ காலம் அவர் என்னை அழைத்துக் கொண்டு தென் தேசமெங்கும் யாத்திரை செய்தார். இந்த மாதிரி வெண்ணிலவு பொழிந்த இரவுகளிலே நானும் அவரும் வெட்டவெளியில் உட்கார்ந்து ஆனந்தமாகக் காலம் கழித்திருக்கிறோம். அவர் பிரயாணம் கிளம்பும்போது பரிவாதினி வீணையையும் உடன் எடுத்து வருவார். வீணைத் தந்திகளை மீட்டி அவர் இசை வெள்ளத்தைப் பெருக்கும்போது, வானமும் பூமியும் நிச்சப்தமாய், நிச்சலனமாய் நின்று கேட்பது போலத் தோன்றும். அந்த நாத வெள்ளத்தைத் தடை செய்யப் பார்த்து காற்றும் நின்று விடும். மரங்களின் இலைகள் அசையமாட்டா. பட்சி ஜாலங்களும் மௌன விரதம் பூண்டிருக்கும்...."

"அண்ணா! நிறுத்துங்கள்! இப்படி நீங்கள் பேச ஆரம்பித்தால் எனக்குச் சித்தம் கலங்கி விடுகிறது. யுத்தமும் இரத்தக் களரியும் என்னத்திற்கு, வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டு வாழ்க்கையை ஆனந்தமாகக் கழித்துவிட்டுப் போகலாமென்று தோன்றிவிடுகிறது!" என்றான் ஆதித்தவர்மன்.

மாமல்லர் கலகலவென்று சிரித்துவிட்டுச் சொன்னார்: "மகேந்திர பல்லவர் இதே மாதிரி வார்த்தைகளை ஒரு காலத்தில் சொன்னதுண்டு. 'உலகத்தில் மன்னர் குலத்தில் பிறந்தவர்களுக்கு மண்ணாசை என்பது போய்விட்டால் இந்தப் பூவுலகே சொர்க்கமாகி விடும்!' என்று சொல்வார். 'உலகத்தில் யுத்தம் என்பதே உதவாது. வேல், வாள் முதலிய போர்க் கருவிகளையே யாரும் செய்யக் கூடாது. கொல்லர் உலைகளிலே பூமியை உழுவதற்கு ஏர்க் கொழுக்களும், சிற்பக் கலைஞர்களுக்கு

---



"வலது கால் ரொம்ப வலிக்குது டாக்டர்!"
"அப்படித்தான் இருக்கும். வயது ஆயிடுச்சு, இல்லையா?"
"இடது காலுக்கும் அதே வயசுதானே! அது மட்டும் ஏன் வலிக்கல்லே?"

ப்ரேம்—பாலி



வேண்டிய சிற்றுளிகளும்தான் செய்யப் பட வேண்டும்' என்று என் தந்தை அடிக்கடி கூறுவார். ஆனால், என்றைய தினம் சளுக்கன் பல்லவ நாட்டின்மீது படையெடுத்ததாகச் செய்தி வந்ததோ, அன்றைய தினமே அவருடைய மனம் அடியோடு மாறிவிட்டது. ஆயிரம் சிற்பிகள், பதினாயிரம் சித்திரக்காரர் களைக் காட்டிலும் மத யானை மீது வேல் எறிந்த இளைஞன் அவருடைய மனத்தை அதிகமாகக் கவர்ந்துவிட்டான்.,... !'' என்று கூறிவிட்டு மாமல்லர் சேனாதிபதி பரஞ்சோதியைப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

''நம் சேனாதிபதி காஞ்சி நகரில் பிரவேசித்த அன்று நடந்த சம்ப வத்தைத் தானே குறிப்பிடுகிறீர்கள் ? அதைப் பற்றி ஒரு நாள் அவரிடம் நானே விவரமாகக் கேட்க வேண்டும் என்றிருந்தேன்'' என்று கூறினான் ஆதித்தவர்மன்.

''என் தந்தையின் அபிமானத்தை நம் சேனாதிபதி கவர்ந்ததுபோல் வேறு யாரும் கவர்ந்ததில்லை. ஒவ்வொரு சமயம் எனக்கு அவர் மேல் பொறாமை கூட உண்டாயிற்று. மகேந்திர பல்லவர் என்னைப் புறக்கணித்துவிட்டுச் சேனாதி பதிக்கே முடிசூட்டிவிடுவாரோ என்று கூடச் சில சமயம் சந்தேகித்தேன். ஆனால், அதற்கு நானும் ஆயத்தமா யிருந்தேன். இன்றைக்குக் கூடச் சேனாதி பதி ஒப்புக் கொண்டால்....'' என்று மாமல்லர் சொல்லி வந்தபோது தளபதி பரஞ்சோதி குறுக்கிட்டார்.

''பிரபு! இப்படி யெல்லாம் பேச வேண்டாம். சாம்ராஜ்யம், சிம்மாச னம் எல்லாம் எனக்கு என்னத்திற்கு ? பட்டிக்காட்டில் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவன் நான். என் தாயாரிடம், 'கல்வி பயின்று வருகிறேன்' என்று வாக்குக் கொடுத்துவிட்டுக் காஞ்சிக்கு வந்தேன். பன்னிரண்டு வருஷங்களுக்கு மேல் ஆகியும் அந்த வாக்கை நிறை வேற்றியபாடில்லை. இன்னும் நிரட்சர குட்சியாகத்தான் இருக்கிறேன். இந்த யுத்தம் முடிந்ததும் என் தாயாருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றப் போகிறேன். சிம்மாசனத்தை யாருக் காவது கொடுத்துத்தான் ஆக வேண் டும் என்றால் இலங்கையிலிருந்து ஒருவர் வந்து காத்துக் கொண்டிருக்கிறாரே, அவ ருக்குக் கொடுங்கள்!'' என்றார்.

மாமல்லர் உடனே ஆதித்தவர்மனை யும் சத்ருக்னனையும் பார்த்துக் கண்ணி னால் சமிக்ஞை செய்ய, அவர்களும் விஷயம் தெரிந்து கொண்டதற்கு அடை யாளமாகப் புன்னகை புரிந்தார்கள்.

**மா**மல்லர் மானவன்மனிடம் அதி கப் பிரியம் வைத்திருக்கிறார் என்னும் விஷயம் சேனாதிபதி பரஞ்சோதியின் மனத்தில் உறுத்திக்கொண்டேயிருந்தது. இதை மாமல்லர் நன்கு அறிந்திருந்தார். வாதாபி யுத்தத்துக்கு மானவன்மனை வரவேண்டாம் என்று காஞ்சியில் அவர் நிறுத்திவிட்டு வந்ததற்கே இதுதான் முக்கியமான காரணம்.

எனவே, மாமல்லர் மற்ற இருவரை யும் பார்த்து, ''பார்த்தீர்களா, நான் சொன்னது சரியாய்ப்போயிற்று'' என்று சொல்வதற்கு அறிகுறியாகச் சமிக்ஞை செய்துவிட்டு, தலை குனிந்தவண்ணம் இருந்த பரஞ்சோதியைப் பார்த்து, ''அழகாய்த்தான் இருக்கிறது! போயும் போயும் அந்த மூடனிடமா மகேந்திர பல்லவர் ஆண்ட இராஜ்யத்தை ஒப்பு விக்கச் சொல்கிறீர் ? அவனை நான் வர வேண்டாம் என்று கண்டிப்பாய்ச் சொல்லி யிருந்தும் அவன்பாட்டுக்குப் புறப்பட்டு வருகிறான். அவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு அவன் மேல் வரும் கோபத் துக்கு அளவேயில்லை. இலங்கைக்கே திருப்பி விரட்டி விடலாமா என்று தோன்றுகிறது. சேனாதிபதி! உம் முடைய அபிப்பிராயம் என்ன ?'' என்று கேட்டார்.

சேனாதிபதி சற்று யோசனை செய்து விட்டு, ''போர்க்களத்துக்கு வர வேண்டும் என்று அவ்வளவு ஆவல் உள்ளவரை எதற்காகத் தடுக்க வேண் டும் ? மானவன்மர் வந்தால் நல்லது தான். நம் யானைப் படைக்கு அவர்

---



ஓய்வு பெற்ற ஊழியருக்குக் கம்பெனி முதலாளி அந்தக் கம்பெனியில் மாட்டப்பட்டிருந்த பெரிய கடிகாரத்தையே பரிசாகக் கொடுத்தார். அவர் கூறியது : ''நீங்கள் எப்பொழுதுமே இந்தக் கடிகாரத்தின்மீது ஒரு கண் வைத்திருந்தீர்கள் என்பது எனக்குத் தெரியும்.'' - லண்டன் - 'டே. ஆர்.'

தலைமை வகித்தால் எவ்வளவோ நன்றாக இருக்கும்'' என்று சொன்னார்.

''எனக்கு என்னமோ சுத்தமாய்ப் பிடிக்க வில்லை. மானவன்மன் நம்முடைய உதவியைக் கோரி வந்து அடைக்கலம் புகுந்தவன். இப்போது அவனுடைய உதவியினால் நாம் ஜயித்தோம் என்று எதற்காக ஏற்பட வேண்டும்.... ?'' என்றார் மாமல்லர்.

அதுவரை ஏறக்குறைய மௌனமாயிருந்த சத்ருக்னன் கூறினான்.

'' சக்கரவர்த்தி ! தாங்கள் அவ்விதம் எண்ணவே கூடாது. இந்த யுத்தத்தில் ஜயிப்பதற்குத் தங்களுக்கு யாருடைய ஒத்தாசையும் தேவையில்லை. தங்களிடம் இல்லாத போர்த்திறமை வேறு யாரிடம் இருக்கிறது ? சேனாதிபதியும் ஆதித்தவர்மரும் இல்லாவிட்டாலும் தாங்கள் வாதாபியை அழித்து விட்டு வெற்றி வீரராய்த் திரும்புவீர்கள். இந்தப் படையெடுப்பிலே கலந்து கொள்வதற்குக் கொடுத்து வைத்தவர்கள் பாக்கியசாலிகள். மானவன்மன் இந்தப் படையெடுப்பிலே கலந்து கொண்டால் அவரால்தான் தாங்கள் ஜயமடைந்தீர்கள் என்ற பெயர் ஒருநாளும் ஏற்பட்டுவிடாது. அதனால் அவருக்குக் கௌரவம் ஏற்படும் என்பதுதான் உண்மை.''

சத்ருக்னன் கூறியதைச் சேனாதிபதி, ஆதித்தவர்மன் இருவரும் பூரணமாக ஆமோதித்தார்கள்.

''மேலும், நம் யானைப் படைக்குப் பயிற்சி அளிக்கும் காரியத்தில் மானவன்மர் மிக்க சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். அவரைப் போருக்கு வர வேண்டாம் என்று சொல்வது நியாயமல்ல !'' என்றார் சேனாதிபதி.

'' யானைப் படைக்கு ஏதோ புது விதமான பயிற்சி இலங்கை இளவரசன் அளித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அது என்ன புதுப் பயிற்சி ?'' என்று ஆதித்தவர்மன் கேட்டான்.

''அது உண்மைதான். முன்னெல்லாம் கோட்டை வாசல் கதவுகளை உடைப்பதற்கு யானைகளை முட்டவிடுவது வழக்கம். காஞ்சிக் கோட்டை முற்றுகையின் போது மகேந்திர பல்லவரின் முன்யோசனையினால் அந்தப் பழைய முறை பலிக்காமல் போயிற்று. கோட்டைக் கதவுகளிலே ஈட்டி முனைகளைப் பொருத்தியிருந்தபடியால், ஒரு தடவை மோதியதுமே யானைகள் வெறி கொண்டு திரும்பி ஓடிப் போயின. இப்போது மானவன்மர் நமது யானைகளுக்கு இரும்பு உலக்கைகளால் கதவுகளைப் பிளக்கவும், கோட்டைச் சுவர்களைக் கடப்பாரைகளைக் கொண்டு





''அடியே, சரோஜா! சந்தோஷ சமாசாரம். என்னை மெட்ராஸுக்கு மாற்றிவிடுவார்கள் போலிருக்கிறது!''

''எப்படிச் சொல்கிறீர்கள்?''

''மானேஜர் இன்றைக்கு என்னிடம், 'இப்படியே ஆபீஸில் தூங்கிவிட்டிருந்தால் உம்மைத் தண்ணீர் இல்லாத காட்டுக்கு மாற்றிவிடுவேன்' என்று எச்சரித்தார்!''



ஒரு கேஸில் கோர்ட்டில் சாட்சி சொல்ல வந்த பெண்மணி இப்படி ஆரம்பித்தாள்: ''கார்ப்பரேஷன் குழாயில் தண்ணீர் வர ஆரம்பித்த சமயம்....''

''கோர்ட்டில் பொய் சொன்னதற்காக இருபது ரூபாய் அபராதம்'' என்றார் நீதிபதி!



''என்ன இது அநியாயமாயிருக்கிறதே! திங்கட்கிழமை பத்து குடம் தண்ணீர் பிடித்து வைத்தீர்கள், செவ்வாய்க்கிழமை பதினைந்து குடம் தண்ணீர் பிடித்து வைத்தீர்கள்: புதன்கிழமை இருபது குடம் தண்ணீர் பிடித்து வைத்தீர்கள், வியாழக்கிழமை இருபத்தைந்து குடம் தண்ணீர் பிடித்து வைத்தீர்கள், இன்றைக்கு மட்டும் என்ன வந்து விட்டதாம்? மூஞ்சியைத் தூக்கி வைத்துக் கொள்கிறீர்களே!''




அரசியல்வாதி: ''சார், நாம் ஒரு சின்னக் காரியம் செய்தால் தண்ணீர்ப் பஞ்சம் தீர்ந்துவிடும்.''

''எப்படி?''

''நான் உங்களுக்கு யாரையாவது விட்டு பத்தாயிரம் ரூபாய் லஞ்சம் தரச் சொல்கிறேன். நீங்கள் அதை வாங்க மறுத்து விடுங்கள். உடனே மழை வரும்!''

-முரளி

# EXTRA ORDINARY FREE OFFER

## VALID FOR 30 DAYS ONLY!

*Free offer only on Indian orders. Foreign orders to bear extra postage.*

### ON ORDERS OVER Rs. 100/-

1. West Asia War ... Rs. 18.50
2. Indo-Pak War ... Rs. 10.00
3. Commercial Letters ... Rs. 7.50
4. G.K. & Current Affairs ... Rs. 4.95
5. Indira Gandhi (Hindi) ... Rs. 3.00

**Packing and Postage will be provided Free on orders over Rs. 25/-.**



### ON ORDERS OVER Rs. 50/-

1. West Asia War ... Rs. 18.50
2. Commercial Letters ... Rs. 7.50

### ON ORDERS OVER Rs. 25/-

1. Indo-Pak War ... Rs. 10.00
2. Indira Gandhi (Hindi) ... Rs. 3.00

*An advance of Rs. 10 - by money order or Bank Draft (No cheques please) must be sent on orders over Rs. 25 -*

- SINGER SEWING BOOK (with 24 Colour Plates-several illustrations and new techniques for fashion sewing ... 66.55
- MARKETING MANAGEMENT by T.A. Latif (Foreword by Manu Bhai Shah, Former Union Minister) ... 25.00
- COMPANY EFFICIENCY AND HUMAN RESOURCES by S. Krishna ... 17.50
- LIBRARY ORGANISATION by B.S. Gujrati, C.S. Library, Chandigarh ... 20.00
- UPANISADS by K.P. Bahadur ... 39.50
- EXPORT METHODS & SERVICES IN INDIA by Agarwal ... 40.00
- EXPORT CREDIT AND FINANCING IN INDIA by Agarwal ... 25.00
- DIRECTORY OF IMPORTERS (ALL WORLD) by Agarwal ... 30.00
- LAL BAHADUR SHASTRI ... 18.50
- GOOD THOUGHTS ... 12.50
- KAMA SUTRA OF VATSYAYANA ... 10.00
- NEW LIGHT'S ENCYCLOPAEDIA OF GENERAL KNOWLEDGE by S.S. Bhakri ... 13.50
- AN INTIMATE STUDY OF SEX BEHAVIOUR by Dayanand ... 25.00
- NEW SEX VALUES by Dayanad ... 25.00
- DICTIONARY OF QUOTATIONS ... 12.50
- DICTIONARY (HINDI TO HINDI) ... 9.00
- HEALTH AND BEAUTY ... 6.50
- PERSONALITY DEVELOPMENT by Prof. A.K. Mitra ... 12.50
- COMMERCIAL CORRESPONDENCE by Anand Sagar (2nd revised and enlarged edition) ... 12.50
- THE ELEMENTS OF FORMAL LOGIC by G.E. Hughes ... 12.75

**ENGLISH IMPROVING**

- 3,000 SYNONYMS & ANTONYMS ... 6.00
- 3,000 QUOTATIONS - C. Anand ... 6.00
- 3,000 IDIOMS & PHRASES ... 6.00
- COMMON ERRORS IN ENGLISH ... 4.50
- IDIOMS AND PHRASES FOR ALL ... 3.00

- PROVERBS FOR ALL OCCASIONS ... 3.00
- QUOTATIONS FOR ALL OCCASIONS ... 3.00
- HOW TO WRITE EFFECTIVE ENGLISH ... 7.50
- IMPROVE YOUR ENGLISH ... 7.50
- PRECIS WRITING ... 3.75

**ESSAY WRITING**

- BHAKRI'S COLLEGE ESSAYS ... 6.00
- SELECTED SCHOOL ESSAYS ... 3.00
- UP-TO-DATE SCHOOL ESSAYS ... 5.00
- SELECTED COLLEGE ESSAYS ... 3.00
- I.A.S. ESSAYS - S.S. Bhakri ... 10.00

**GENERAL KNOWLEDGE**

- NEW LIGHT'S GENERAL KNOWLEDGE, CURRENT AFFAIRS, WHO'S WHO AND INTERVIEWS - S.S. Bhakri ... 4.95
- NEW LIGHT'S ENCYCLOPAEDIA OF GENERAL KNOWLEDGE - S.S. Bhakri ... 13.50

**JOBS**

- APPLICATIONS FOR BETTER JOBS ... 6.00

**JOKES**

- CHILDREN JOKES ... 3.00
- LOVERS' JOKES (Illustrated) ... 6.00
- BACHELORES JOKES (Illustrated) ... 6.00
- TOP PARTY JOKES (Illustrated) ... 5.00
- SOCIETY JOKES (Illustrated) ... 5.00

**YOGA**

- YOGA FOR ALL - Amber Raj Anand ... 5.00

**SEX BOOKS**

- MARRIAGE TECHNIQUES (Illustrated) ... 5.00
- NAR NARI (Hindi) ... 4.00
- KAMASUTRA OF VATSYAYANA English ... 10.00
- KAMASUTRA OF VATSYAYANA (Hindi) ... 7.50
- KAMASUTRA - Dr. J.L. Parnon ... 5.00

**LETTER WRITING**

- BUSINESS LETTERS - K. Malik ... 7.50
- SELECTED LETTERS - K. Malik ... 7.50
- LOVE LETTERS - Manohar ... 6.00
- CURRENT LETTERS - Manohar Lal ... 4.50
- TOP EVERYDAY LETTERS ... 9.00
- OFFICE PROCEDURE & DRAFTING ... 7.50
- 1111 LETTERS FOR ALL OCCASIONS ... 7.50
- COMMERCIAL LETTERS - Anand Sagar ... 7.50
- COMMERCIAL CORRESPONDENCE ... 12.50

**READY RECKONERS**

- TOP READY RECKONER - R.D. Chaudhari ... 7.50
- TOP TIMBER CALCULATOR R.D. Chaudhari ... 7.50

**TECHNICAL BOOKS**

- PHYSICAL AND STEAM TABLES - K.K. Rampal ... 2.00
- SOUND EQUIPMENT MANUAL (Illustrated) ... 2.50
- RADIO INDUCTANCE MANUAL ... 2.50
- RADIO HINTS MANUAL ... 2.50
- PRACTICAL TRANSISTORS Hindi English ... 3.75

**MISCELLANEOUS**

- CHECK YOUR I.Q. ... 6.00
- HOW TO GET MORE MARKS IN THE EXAMINATION ... 6.00
- SUCCESSFUL INTERVIEWS ... 7.50
- SPORTS AND GAMES - Robert D'Souza ... 6.00
- SUCCESSFUL SALESMANSHIP ... 7.50

**MASTER GUIDES FOR COMPETITIVE EXAMS.**

- N.D.A. EXAMS. ... 15.00
- BANK'S CLERKS GUIDE ... 12.50
- RAILWAY SERVICE COMMISSION GUIDE ... 10.00
- STENOGRAPHER'S GUIDE ... 12.50
- BANKS RECRUITMENT TESTS ... 6.00
- ASSISTANT GRADE EXAMS. ... 15.00
- CLERKS GRADE GUIDE ... 12.50
- I.Q. FOR COMPETITIONS ... 6.00
- STATE BANK PROBATIONARY OFFICERS ... 15.00
- RESERVE BANK OFFICERS ... 15.00

**CHILDREN BOOKS**

Set of 5 Books (Air, Space, Sound, Magnetism etc) ... 25.00

- BABY DOLL BOOK ... 4.00
- CHILDREN JOKES ... 3.00
- SELECTED SCHOOL ESSAYS ... 3.00
- PICTURE BOOK ... 3.00
- TOY BOOK ... 4.00

## NEW LIGHT PUBLISHERS

**School Marg, Rajinder Nagar, New Delhi-110060 (INDIA)**

TRENDS

இடிக்கவும், திவர்த்திப் பந்தங்களைத் தூக்கி வீசிக் கோட்டைக்குள் எறியவும் கற்பித்திருக்கிறார்.''

''ஆஹா! இதுவரை இம்மாதிரி யானைப் படையை உபயோகித்ததாக நான் கேட்டதே இல்லை!'' என்றான் ஆதித்தவர்மன்.

சேனாதிபதி பரஞ்சோதிக்கு மானவன்மரிடம் தனிப்பட்ட முறையில் விரோதம் எதுவும் கிடையாது. அவரிடம் மாமல்லர் அதிக அன்பு வைத்திருக்கிறார் என்பதிலேதான் அதிருப்தி. எனவே, இப்போது மாமல்லர் அவரைப் பற்றி அலட்சியமாகப் பேசியதும், அவரே மானவன்மருடைய கட்சி பேச ஆரம்பித்தார்.

''ஆகையினால்தான் மானவன்மரைத் திருப்பி அனுப்புவது நியாயமல்ல என்று நான் சொல்லுகிறேன். யானைப் படைக்கு இப்பேர்ப்பட்ட புதிய பயிற்சி அளித்து ஆயத்தப்படுத்தியவருக்கு, அந்த யானைப் படை யுத்தத்தில் தாமும் கலந்து கொள்ள வேண்டும் என்று ஆசையாயிராதா?'' என்றார் சேனாதிபதி பரஞ்சோதி.

இந்தச் சமயத்தில், அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த பிரும்மாண்டமான அரச விருட்சத்தில் ஒரு பெரிய சலசலப்பு ஏற்பட்டது. அந்த மரத்தின் அடர்த்தியான கிளைகளில் இரவு நேரத்தைக் கழிப்பதற்கென்று அடைக்கலம் புகுந்திருந்த ஆயிரக்கணக்கான பறவைகள் சடசடவென்று இறகுகளை அடித்துக் கொண்டும் பற்பல சுருதி—ஸ்வரங்களில் கூச்சலிட்டுக் கொண்டும் வெளிவந்து வட்டமிட்டு மறுபடியும் கிளைகளுக்குள் புகுந்து ஆரவாரம் செய்தன.

''அந்த மரத்துக்குத் திடீரென்று என்ன வந்து விட்டது? மரம் ஏறக் கூடிய காட்டு மிருகம் ஏதாவது அதில் ஏறிவிட்டதா? பறவைகள் இப்படி அலறுகின்றனவே!'' என்று மாமல்லர் கேட்டதற்கு அந்தத் திசையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த சத்ருக்னன், ''பிரபு! காட்டு மிருகம் எதுவும் அந்த மரத்தில் ஏறவில்லை. வீட்டு மிருகம்—இரண்டு கால் மிருகம் ஒன்று அந்த மரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கிறது!'' என்றான்.

உடனே அவன் கையை ஓங்கித் தட்ட, சற்றுத் தூரத்தில் ஆயுதபாணிகளாகக் காவல் புரிந்த வீரர்களில் ஒருவன் அவர்கள் இருந்த இடத்துக்கு விரைந்து ஓடிவந்தான்.

''அதோ பார்! அந்த அரச மரத்திலிருந்து யாரோ ஒருவன் கீழே இறங்கிக் கொண்டிருக்கிறான். அவனைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்!'' என்று சத்ருக்னன் கட்டளையிட்டான்.

அவ்விதமே மேற்படி வீரர்கள் விரைந்து அரச மரத்தை நோக்கிச் சென்று, அதிலிருந்து கீழே இறங்கிய வனைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொண்டு வந்தார்கள்.

வீரர் தலைவன், ''பிரபு! இதோ வாதாபி ஒற்றன்!'' என்று கூறித் தலை வணங்கினான்.

மாமல்லரும் பரஞ்சோதியும் கலீரென்று சிரித்தார்கள்.

ஏனெனில், அந்த வீரர்களால் கொண்டு வரப்பட்டவன் வேறு யாருமல்ல; நம் பழைய சிநேகிதன் குண்டோதரன்தான்!

''குண்டோதரா! இது என்ன? எதற்காக நீ வாதாபி ஒற்றன் என்று சொல்லிக்கொண்டாய்?'' என்று பரஞ்சோதி கேட்டார்.

''ஆம், சேனாதிபதி! நான் சொன்னது உண்மைதானே? 'வாதாபி ஒற்றன்' என்றால், 'வாதாபிக்குப் போய் வந்த ஒற்றன்' என்ற அர்த்தத்தில் சொன்னேன். உடனே அந்த வீரர்கள் என்னை ஒரே பிடியாய்ப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து விட்டார்கள். அப்பா! அவர்கள் பிடித்த இடங்களில் இன்னும் வலிக்கிறது!'' என்றான்.

''ஆமாம்! ஆனால் அந்த மரத்தின் மேலேறி என்ன செய்து கொண்டிருந்தாய்? எத்தனை நேரமாய் அங்கு உட்கார்ந்து கொண்டிருக்கிறாய்?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''பிரபு! நேற்றிரவே இங்கு வந்து விட்டேன். காலையில் எழுந்து பார்த்தால் நம் சைனியம் வந்து கொண்டிருந்தது. உடனே மரத்தின் மேல் ஏறியவன்தான். இத்தனை நேரமும் நம் சைனியத்தின் கணக்கு எண்ணிக் கொண்டும், வாதாபி புலிகேசியை ஜயிப்பதற்கு இந்தச் சைனியம் போதுமா என்று யோசித்துக் கொண்டும் இருந்தேன்.''

''என்ன முடிவு செய்தாய்? சைனியம் போதுமா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''சுவாமி! அதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை. ஆனால், வாதாபிக்கு நாம் போய்ச் சேருவதற்குள்ளே, அஜந்தா குகைக்குப் போயிருக்கும் புலிகேசிச் சக்கரவர்த்தி வாதாபிக்குத் திரும்பி வரவேண்டுமே! அவர் வெளியில் தங்கி விட்டால் என்ன செய்கிறது என்றுதான் கவலைப்படுகிறேன்!'' என்றான் குண்டோதரன். (தொடரும்)

---



வர்த்தகர்களுக்கு முக்கியமாக வேண்டியது இரண்டே குணங்கள். அவை நாணயமும், புத்திசாலித்தனமும்தான். பிறருக்குக் கொடுத்த வாக்கைக் காப்பது நாணயம்; பிறருக்கு வாக்குக் கொடாமல் இருப்பது புத்திசாலித்தனம்!

# இந்த மர்ம நாவலை நீங்கள் படித்து வரும்போதே ரூபாய் 500/= பரிசு பெறும் வாய்ப்பையும் அடைகிறீர்கள்!

இந்த நாவலைப் படித்துக் கொண்டு வரும்போதே ரூ. 500/- பரிசு பெறும் வாய்ப்பும் உங்களுக்கு இருக்கிறது.

கதை முடிவதற்கு இன்னும் நாலு அத்தியாயங்களே பாக்கி இருக்கும்போது அடுத்த பத்து நாட்களுக்குள் கதையின் முடிவை ஊகித்துச் சொல்லுமாறு நேயர்களைக் கேட்போம். ரேகா சந்திரநாத் எம்மிடம் எழுதித் தந்திருக்கும் முடிவினை ஊகித்து எழுதுகிறவருக்கு ரூ. 500/- பரிசு வழங்கப்படும். ரேகா சந்திரநாத் போலவே அதே நடையைக் கையாண்டு எழுதத் தேவையில்லை. கதையின் முடிவு இன்னது என்று ஊகித்துச் சுருக்கமாய்க் கூறினால் போதும்.

ஒருவருக்குமேல் சரியான விடை எழுதியிருந்தால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். யார் கண்டது; முழுப் பரிசையும் நீங்களே கூடத் தட்டிக் கொண்டு போகலாம்!

**முக்கிய நிபந்தனை:** இப்போட்டியில் பங்கு கொள்கிறவர்கள் ரேகா சந்திரநாத்தின் நண்பர்களாகவோ, உறவினர்களாகவோ, கல்கி காரியாலயத்தைச் சேர்ந்தவர்களாகவோ, அவர்களின் உறவினர்களாகவோ எழுத்தாற்றலால் ஏற்கெனவே பிரபலம் அடைந்தவர்களாகவோ இருக்கக் கூடாது.

## ரேகா சந்திரநாத்

எழுதும்




## திரில் தொடர்கதை

## கல்கி ஆகஸ்டு 3

## சிறப்பிதழில் ஆரம்பம்.




# அறுவைச் சிகிச்சை!



மேலை நாடுகளில் செயற்கை முறையில் அழகுபடுத்திக் கொள்ளக் குறிப்பாகப் பெண் மணிகள் ''பிளாஸ்டிக் ஸர்ஜரி'' செய்து கொள்ள முன்வருகின்றனர். சான்றாக, மூக்கு, மார்பகம் இவை எடுப்பாக இருக்கப் பிளாஸ் டிக் சிகிச்சை செய்து கொள்வோர் பலர். ஆனால், நம் நாட்டில் தீப் புண், புற்று நோய், தொழுநோய், யானைக்கால் கைவீக் கம் (Filariasis) தொழிற்சாலைகளில் நிகழும் விபத்துக்களால் கை, கால்கள் பாதிக்கப் படுவோர்–இவர்களே பெரும்பாலும் பிளாஸ் டிக் சிகிச்சை செய்து கொள்கின்றனர்.

'பிளாஸ்டிக் சர்ஜரி' எனப்படும் 'புனர் நிர்மாண அறுவைச் சிகிச்சை' (Reconstructive Surgery) தமிழ் நாட்டில் முதன் முத லாகச் சென்னை நகர அரசினர் பொது மருத் துவ மனையில் 1963ம் ஆண்டில் துவங்கியது. இத்துறையின் தலைமைப் பொறுப்பு வகிக்கும் டாக்டர் சி. ஆர். சுந்தரராஜன், சென்னை மருத்துவக் கல்லூரியில் இந்த அறுவைச் சிகிச்சையில் பயிற்சி அளிக்கும் பேராசிரியரும் ஆவார்.

டாக்டர் சுந்தரராஜன் இச்சிகிச்சை பற்றி விளக்குகிறார்: ''நம் நாட்டுக்கு இது ஒன்றும் புதிதல்ல. கி.மு. 800ம் ஆண்டு அளவிலேயே ரணசிகிச்சைத் துறையின் தந்தை எனப் போற்றப்படும் **சுச்ருதர்** இச் சிகிச்சை முறையை வெற்றிகரமாகக் கையாண்டுள்ள தாக வரலாறுஉளது. முதல், இரண்டாவது உலகப் போர்களில் பலர் படுகாயமுற்றதன் விளைவாகப் பிளாஸ்டிக் சர்ஜரி வேகமாக வளர்ச்சியுற்றது. எனவே இன்றைய நவீன பிளாஸ்டிக் அறுவைச் சிகிச்சை முறைக்கு 50 வயது எனக் கூறுதல் பொருந்தும். 1956–57 முதல் இது நம் நாட்டில் பரவலாகக் கையா ளப்பட்டு முன்னேற்றம் அடைந்துள்ளது.''

'' 'பிளாஸ்டிக் சர்ஜரி' என்று இதற்குப் பெயர் வரக் காரணம் என்ன?' ''

''பிளாஸ்டிக் என்ற பொருளுக்கும் இதற் கும் நேரிடைத் தொடர்பு ஏதுமில்லை. நம்

புனர் நிர்மாண சிகிச்சைக்கு
முன்னும் பின்னும்
நேர்முகத் தோற்றம்





உடலின் சதை பிளாஸ்டிக் மாதிரி துவண்டும் நெளிந்தும் மிருதுவாகவும் வளைந்து கொடுப்பதாகவும் உள்ளதால் இப்பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும்.''

சிகிச்சைக்குமுன் எடுத்த புகைப்படம் என்று ஒன்றைக் காண்பிக்கிறார், டாக்டர் சுந்தரராஜன். ஒரு பெண்ணின் திறந்த வாயினுள் மேலண்ணத்தில் ஒரு பெரிய புள்ளி தெரிகிறது. ''புள்ளி போலத் தெரியும் இது, மேலண்ண (Palate)த்தில் விழுந்த ஒரு துவாரம். சதையை ஒட்டி அந்த ஓட்டையை அடைத்த பிறகு எடுத்த படம் இது'' என்று டாக்டர் விளக்கி மற்றொரு படத்தைக் காட்டுகிறார். ஓட்டை இருந்த இடமே தெரியாமல் முற்றும் மறைந்துவிட்டிருக்கிறது.

'காங்க்ரம் ஆரிஸ்' (Cancrum Oris) என்று ஒரு வியாதி தென்னாட்டில் மிகுதியாக உள்ளது. உணவில் புரதச் சத்து குறைவாக இருப்பதால் உதடுகள் வெடித்து வாய் அரித்துப் போய்விடுகிறது. காய்ச்சலும் கடுமையாக இருக்கும். இந்நோய்க்குப் பிளாஸ்டிக் ரண சிகிச்சை பெரிதும் பயன்படுகிறது. டைபாய்டு, வைசூரி, புற்றுநோய், பெருவியாதி முதலிய நோய்களால் உடலின் பல்வேறு உறுப்புக்கள் வெகுவாகப் பாதிக்கப் படுவதுண்டு. நோய் குணமான பிறகு உரிய காலத்தில் இச்சிகிச்சை அளித்தால் நல்ல பலன் ஏற்படும். தொழுநோய், அல்லது விபத்துக்கள் காரணமாகக் கை, கால்கள் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சிகிச்சை அளிக்கையில், சதை ஒட்டித் தோற்றத்தைச் செம்மையாக்குவது ஒருபுறமிருக்க, விரல்களில் உணர்ச்சி ஏற்படச் செய்வதும், சரியாக நீட்டி மடக்கச் செய்வதும் இச்சிகிச்சையினால் ஏற்படும் நல்ல பலனாகும். வாயினில் புற்றுநோய் கண்டால், புற்றுநோய் 'செல்'களை முற்றும் அகற்றி, வெட்டி எறியப்பட்ட சதைக்குப் பதில் உடலின் வேறு பகுதியிலிருந்து சதையைக் கொண்டு செலுத்தி ஈடு செய்ய வேண்டும். பாதிக்கப்பட்ட பகுதியில் சதை நன்கு வளர்ந்தபிறகு இயல்பான தோற்றம் அமையும்படி வெட்டிவிட்டால் நாளடைவில் இரத்த ஓட்டம் சரிவர ஏற்படும்.

''எந்தெந்த இடத்துக்கு ஏற்ற சதை எந்தெந்த இடங்களில் உகந்த முறையில் கிடைக்கும்?''

''கன்னம், மூக்கு ஆகிய இடங்களுக்குத் தேவைப்படும் சதையை வயிற்றுப் பகுதியிலிருந்தும் முதுகிலிருந்தும் எடுத்துக் கொள்ளலாம். வயிற்றுப் பகுதிக்குத் தேவையான சதையைத் துடையிலிருந்து கொண்டு செலுத்தலாம். பல சந்தர்ப்பங்களில் எலும்புச் சிகிச்சை நிபுணர், நரம்புச் சிகிச்சை வல்லுநர் முதலியோரின் ஆலோசனையும் உதவியும் இச்சிகிச்சைக்குத் தேவைப்படும். சிகிச்சை முடிந்த பிறகு—நோயாளி கடைப்பிடிக்க வேண்டிய உபயோகமான ஆலோசனைகளையும் கூறுவோம். உதாரணமாக வாயில் சிகிச்சை அளிக்கப்பட்டால் மிகவும் சூடான பானங்கள் அருந்தக் கூடாது; பாதத்தில் சிகிச்சை செய்தால், மிருதுவான (Padded) காலணிகள் உபயோகிக்க வேண்டும். உடலின் எந்தப் பகுதியில் சிகிச்சை அளிக்க வேண்டுமானாலும், ஒவ்வொன்றுமே மருத்துவர்களுக்கு ஒரு சவால்தான்'' என்கிறார் டாக்டர் சுந்தரராஜன்.

நூறு உறுப்பினர்கள் அடங்கிய இந்திய பிளாஸ்டிக் சர்ஜன்கள் சங்கத்தின் தலைவராகப் பணியாற்றும் டாக்டர் சுந்தரராஜன் இத்துறையில் பயிற்சி பெற மேலைநாடுகளுக்குச் செல்லவில்லை. எனினும் இத்துறையில் சிறந்த நிபுணராக விளங்குகிறார் என்பதிலிருந்து, இத்துறையில் போதிய பயிற்சிக்கான வாய்ப்புக்கள் நம் நாட்டிலேயே உள்ளன என்ற உண்மை புலனாகிறது.

எம்.எஸ். பட்டம் பெற்ற அறுவைச் சிகிச்சை நிபுணர் இத்துறையில் பயின்று தேர்ந்த பிறகு (M. Ch.—Master of Chirurgery) என்ற பட்டத்தைப் பெறுவார். —பாணன்

புனர் நிர்மாணச் சிகிச்சைக்கு
முன்னும் பின்னும்
பக்கவாட்டுத் தோற்றம்





# ஃபயூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

## டாடா ஃபைஸன் ராலீஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3ஜீ மருநது

**நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகிறது. இது பயிர் முழுவதும் பரவி செய லாற்றுவதோடு, அதிக பச்சையான நெற்பயிரைத் தருகிறது; ஹெக்டேருக்கு மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதை விட 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகிறது.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளை யும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப் படுகிறது ஃப்யூராடான் 3ஜீ. இது பயிர் முழுவதும் பரவும் நஞ்சியல்பு கொண்ட மருந்தாகும். இதை நிலத்திலும், நெல் வயலிலுள்ள நீரிலும் போட்டால் பயிர்கள் வேர் கள் மூலம் அதை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் பயிரைக் கடித்து மெல்லும், துளைக் கும் மற்றும் அதன் சாற்றை உறிஞ் சும் பூச்சிகளைக் கட்டுப் படுத்து-கிறது.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கன மானபுதியமுறை, அதாவது விதை கள் / நாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைப்பற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒரு முறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விவரங்களுக்கு எழுதுக:
ராலீஸ் 'இந்தியா லிமிடெட்
ஃபெர்ட்டிலைஸர்ஸ் & பெஸ்டிசைட்ஸ் டிவிஷன், 320, லிங்கி செட்டி தெரு, சென்னை 600 001.

**விசேஷ சிறப்பம்சங்கள்**
ஃப்யூராடான் 3ஜீ, மேலாகத் தூவப்படும் பூச்சிக்கொல்லிகளை விடச் சிறந்தது; மிகவும் பயனுள்ளது.

- நெற்பயிரைத்தாக்கும் தண்டு துளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், அசிக்-குப் பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகிறது.
- விசேஷ கருவிகளின் உதவியின்றியே கையாலேயே இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப் படுத்து-கிறது.
- பூச்சிகளை விரைவில் தாக்குவதற்காக பயிர் முழுவதும் உடனடியாகப் பரவி விடுகிறது.
- இதை மழை அடித்துச்செல்ல முடியாது... தேவைப்படுகிறவரை நீண்ட காலம் பாதுகாப்புத் தருகிறது.
- தானிய மணியில் மருந்து தங்கவோ, காற்றடிக்கவோ செய்யாது.
- இந்தப் பயிரை அழிக்கும் பூச்சிகளை மட்டுமே பாதிக்கும்; பயிருக்கு சகஜமான பூச்சிகளுக்கு ஆபத்தல்ல.




**அதிக நெல் விளைச்சல் பெற....ஃப்யூராடான் 3 ஜீ குருணைகள்**

ORM 3134R TM

# சப்தகிரியானுக்குச் சமர்ப்பித்த சப்தஸ்வரங்கள்



வரவேற்புப் பத்திரத்தை வழங்குகிறார் திரு ராஜகோபால ராஜு

சங்கீத கலாநிதி திருமதி எம். எஸ். சுப்புலட்சுமிக்குச் சென்ற மாதக் கடைசியில் திருப்பதி ஸ்ரீ வேங்கடேசுவர தியாகராஜ உற்சவக் கமிட்டியினர் **'சப்தகிரி சங்கீத வித்வன்மணி'** என்னும் விருதினை வழங்கிக் கௌரவித்தனர். பாராட்டு விழா ஸ்ரீ தியாகராஜ மண்டபத்தில் நடைபெற்றது.

மண்டபத்தின் முகப்பில் ஸ்ரீ சதாசிவம் தம்பதியை உற்சவக் கமிட்டியினர் வேதகோஷத்துடனும் மங்கல ஒலியுடனும் வரவேற்று, சிறப்பாக அலங்கரிக்கப்பட்டிருந்த மேடைக்கு அழைத்துச் சென்றனர்.

இறைவணக்கத்துக்குப் பின்னர் திரு எம். கிருஷ்ணஸ்வாமி வரவேற்புரை நிகழ்த்துகையில் கர்நாடக இசைக்கு எம். எஸ். சிறப்பாகத் தொண்டாற்றி வருவதையும் அதற்கு அவரது கணவர் திரு. சதாசிவம் உறுதுணையாக விளங்கி வருவதையும் குறிப்பிட்டார்.

திரு முனிரெட்டி திருமதி சுப்புலட்சுமிக்கு வாழ்த்துப் பத்திரம் வாசித்து வழங்குகையில், 'ஸ்ரீ வேங்கடேச்வர சுப்ரபாதம்' இசைத்தட்டின் வாயிலாக இந்துக்களின் இல்லங்கள் அனைத்திலும் அதை அவர் ஒலிக்கச் செய்து வருவதையும், அதன் ராயல்டி வருமானம் முழுவதையும் ஏழுமலையானுக்கே காணிக்கையாக்கியிருப்பதையும் சுட்டிக்காட்டி, அத்தகைய இசைச் செல்விக்கு 'சப்தகிரி சங்கீத வித்வன்மணி' விருது வழங்குவது சாலப் பொருத்தமே என்று கூறினார்.

விழாவுக்குத் தலைமை தாங்கிய திரு ராஜகோபால ராஜு இசையரசி எம். எஸ்.ஸின் இசை மேதையையும் இசை வாயிலாக நாட்டின் நற்பணிகளுக்கெல்லாம் அவர் செய்து வரும் மாபெரும் உதவியையும் பாராட்டி, 'சப்தகிரி சங்கீத வித்வன்மணி' விருதை அன்னாருக்கு வழங்குவதைத் தாம் ஒரு தனிப் பெருமைக் கருவதாகக் கூறினார்.

ஸ்ரீ பத்மாவதி, ஸ்ரீ வேங்கடேச்வரர் உருவங்கள் ஒருபுறமும் 'சப்தகிரி சங்கீத வித்வன்மணி' என்னும் விருது மறுபுறமும் பொறிக்கப் பெற்ற, பொற் கொடியில் பொருத்தப்பட்ட தங்கப் பதக்கத்தைத் திருமதி ராஜகோபால ராஜு திருமதி சுப்புலட்சுமிக்கு அணிவித்தார்.

திருமதி சுப்புலட்சுமியின் சார்பில் பதிலளித்த திரு சதாசிவம், தமது துணைவியிடம் இறையருளினால் இயல்பாகவே அமைந்திருந்த இசைச் செல்வத்தை வளர்ப்பதற்கு இயன்ற வரையில் தாம் முயன்றதாகவும், இத்தகைய பெருமைக்கு அவரைப் பாத்திரமாக்கியது திருவேங்கடமுடையானின் அருளும் காஞ்சிப் பெரியவரின் ஆசியுமே என்றும் குறிப்பிட்டு, அவருக்கு விருது வழங்கிக் கௌரவித்த ஸ்ரீ வேங்கடேச்வர தியாகராஜ உற்சவக் கமிட்டியினருக்கு மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்தார். திருப்பதியில் தியாகராஜஸ்வாமியின் ஆராதனையை ஆண்டுதோறும் சிறப்புற நடத்த வேண்டும் என்றும் குறிப்பிட்டார்.

பிறகு, திருமதி எம். எஸ். மூன்று மணி நேரம் ராக வடிவங்கள் தெளிவுடன் பனிச்சிடும் வகையில் உருக்கமுடன் பாடி மகிழ்வித்தார். அவையினர் இசையில் லயித்து மெய்மறந்து அமர்ந்திருந்தனர்.

விருது பொறிக்கப்பட்ட தங்கப் பதக்கத்தை திருமதி ராஜகோபால ராஜு அணிவிக்கிறார்.





**சந்தன சோப் என்றால் மைசூர் சந்தன சோப் ஒன்றுதான்.**

நாள் முழுவதும் நறுமணம் அளிக்கும் இச்சந்தனத் தைலம் உலகிலேயே நம் இந்தியாவில் மட்டும் உற்பத்தி செய்யப் படுகிறது. அதிலும் பெரும்பாலும் மைசூர் மாநிலத்தில் (இப்பொழுது கர்நாடகா மாநிலம்) தான் உற்பத்தி செய்யப்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? உலகில் எந்த மூலையில் தேவை இருந்தாலும் முதலில் உபயோகிக்கும் வாய்ப்பு உங்களுடையதே. ஆகவே இப்பொழுது நீங்கள் சொல்லுவீர்கள் "உண்மையான சந்தன சோப் மைசூர் சந்தன சோப்" என்று. இல்லையா ?




**நீண்ட கோடைக்காலம்.**

கோடைக்காலம் தவிர மழைக்காலம், குளிர்காலம் போன்ற காலங்களில் இந்த சோப் உபயோகிக்கக் கூடாதா என்ன என்று நீங்கள் கேட்கலாம். அதுவும் சரிதான். ஆனால் மற்ற காலங்களிலும் நீங்கள் இந்த மைசூர் சந்தன சோப் உபயோகித்தால் வருடம் முழுவதும் ஆனந்தப் படலாம். அதற்காக இலவம் காத்த கிளிபோல நீங்கள் தாமதப்படுத்தாமல் இன்றே இப்பொழுதே இக்கணமே மைசூர் சந்தன சோப் வாங்கி நறுமணத்தை நுகருங்கள். ஆனந்தமடையுங்கள்.




# மைசூர் சாண்டல்

**தினந்தோறும் நறுமணம் கமழ**
**புத்துணர்ச்சி தருவது**

தயாரிப்பாளர்கள்: கவர்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்

பூரண விற்பனையாளர்கள்: மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட், பெங்களூர்.

## 50. கர்நாடகத்தின் கேலி

போலியைத் தாக்கிடக்
கேலி எனில்
கேலியைத் தாக்கவும்
கேலி

பெரும்பாலும் புராணப் பாத்திரங்களே உலாவிய அக்கால நாடகங்களில் பாட்டுக்களே பிரதானமாக இருந்தன. மைக் இல்லாத அந்நாளில் தரை மகாஜனங்களின் செவிகளுக்கு எட்டும்படியாகத் தொண்டை கிழியப் பாடக் கூடியவர்களே, ராஜபார்ட் ஸ்திரீபார்ட்டுகளாய் இருந்தார்கள். அவர்களுக்கு ஏற்றம் கொடுக்கும் அசுரப் பார்ட்டாகவும், அவர்களுக்கு ஒப்பாக மேடையிலேயே ஏற்றம் கொண்டதாகவும் இருந்தது ஹார்மோனியம். அதைக் கையாலும் காலாலும் அழுத்தி, அலற விட்டு, அதற்கு ஏற்ப வாயாலும் அலறிய பின்பாட்டுக்காரருக்கு, முன்பாட்டுக்காரருக்குச் சமமான அந்தஸ்து இருந்தது.



# பொன்னியின் புதல்வர்

சுந்தா



''அடிப்பேன்! அடிப்பேன்!''
''முடியுமா? முடியுமா?''

அவ்வித மேடை நாடகங்களின் மேட்டிமைக் காலத்தில் எஸ். வி. சுப்பையா பாகவதர் என்றொரு ராஜபார்ட் சங்கீதச் சிங்கமும், தேவுடு அய்யர் என்றொரு ஹார்மோனிய பின்பாட்டுச் சிங்கமும் இருந்தார்கள். நெடுங்காலமாய் அந்தச் சிங்கங்கள் இரண்டும் பல்லவிப் போர்களும், பிர்க்காச் சண்டைகளும், ஸ்வரச் சமர்களும் நடத்தி, கண்கொள்ளாக் காட்சி யளித்து, செவி கொள்ளாக் களிப்பை ஊட்டி வந்தார்கள். திடீரென அவர்கள் நடிப்புச் சண்டை நிஜச் சண்டையாய் மாறியதாலோ என்னவோ ஜோடி பிரிந்து விலகிப் போனார்கள். பின்னர் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு சென்னைக் கொட்டகை ஒன்றில், 1933 மார்ச் நாலாம் தேதி ''பாமா விஜயம்'' நாடகத்தில் அந்த இருவரும் சேர்ந்து தோன்றப் போவதாக, சுவருக்குச் சுவர் விளம்பரங்கள் அறிவித்தன. ''இரண்டு வருஷமாக மனஸ்தாபத்தினால் ஒன்று சேராமலிருந்த கேசரிகளைக் காணத் தவறாதீர்கள்'' என்று அவை அழைப்பு விடுத்தன.

அப்போதுதான் கர்நாடகமாய் ''மாறுவேடம்'' பூண்டிருந்த கல்கி, அந்த விளம்பரத்தைப் பார்த்து விட்டு அம்மாத முதல் தேதி இதழில் ''ஆடல் பாடல்'' பகுதியில், கேலிக் குறிப்பு ஒன்றை வெளியிட்டார். அதில் அவர், அந்தச் சிங்கங்கள் ஒன்றோடொன்று சண்டை போடுவதோடு நில்லாமல், சபையோர் மீது பாய்ந்து விட்டால் ஆபத்தாச்சே என்று கவலை தெரிவித்தார். எதற்கும் முன்னெச்சரிக்கையாக நாடக மேடையில் இரும்புக் கம்பி வேலி போட்டு வைத்தால் தேவலை என்று யோசனை கூறினார். வேலியை எப்படிப் போடலாம் என்பதற்குப் படம் போட்டுக் காட்டியிருந்தார். அத்துடன் நில்லாமல், இன்னொரு கேலி

யையும் அந்தக் குறிப்பில் கல்கி தொடரவிட்டார்: ''சுப்பையா பாகவதருக்கு 'பாகவதர்' பட்டம் ஏன் வந்தது என்று நேயர்கள் தெரிந்து கொள்ள ஆவலாய் இருக்கலாம். இந்த இரகசியத்தை அவர்களுக்குத் தெரிவிக்க எனக்கு மிக்க சந்தோஷமாக இருக்கும். ஆனால் ஒரே ஒரு தடை குறுக்கிடுகிறது. அது என்னவென்றால், மேற்படி இரகசியம் எனக்குத் தெரியாமலிருப்பதே.''

பின்னர் அந்த நாடகத்தைப் பார்த்துவிட்டு, எதிர்பார்த்தபடி சண்டை ஏதும் நடக்காமல் ஏமாற்றமாய்ப் போய்விட்டது என்று எழுதினார்: ''சுத்த மோசடி! வெறும் கர்ஜனையோடு சரி! ஸ்ரீ சுப்பையா பாகவதர் ஹார்மோனியத்தின் அருகில் நின்று இரண்டு விரலைக் காட்டி காட்டி, ''அடிப்பேன், அடிப்பேன்'' என்று பயமுறுத்திக் கொண்டிருந்ததும் தேவுடு அய்யர் முக வாய்க்கட்டையைத் தூக்கி அழகு காட்டிக் கொண்டே '' முடியுமா ? முடியுமா ?'' என்று சமிக்ஞை செய்து கொண்டிருந்ததும் உண்மைதான். இந்த ஜாடை சமிக்ஞைகளுடன் காரியம் நின்று போயிற்று. கை கலக்கவே இல்லை.''

இப்படிக் கேலிக்கு இலக்கான இருவரில் தேவுடு அய்யர் சும்மா இருந்துவிட்டார். ஆனால் சுப்பையா பாகவதரோ சங்கீதத்தால் பின்பாட்டுக்காரருடன் போடத் தவறிய சண்டையை, சட்டத்தால் ஆனந்த விகடனுடன் போடத் தீர்மானித்தார். அதன்விளைவாக வாசனுக்கு ஒரு வக்கீல் நோட்டீஸ் வந்தது. அதன் சாரம் என்னவென்றால் — பிரஸ்தாபக் குறிப்புக்களால் பாகவதருக்கு மானநஷ்டம் உண்டாகிவிட்டது; அவைகளை எழுதியதற்காக மன்னிப்புக் கேட்டுக் கொள்வதுடன், நஷ்ட ஈடாக இரண்டாயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும்; தவறினால், சிவில் கிரிமினல் வழக்குகள் தொடரப்படும்.

வாசன் வாசித்துக் காட்டிய அந்த நோட்டீசைக் கேட்டதும், ''நாசமாப் போச்சு'' என்றார்






கல்கி. ''வீண் வம்பிலே மாட்டிக்கொண்டோம் போலிருக்கே!''

''வம்பும் இல்லே, தும்பும் இல்லே'' என்றார் வாசன். ''இதுமாதிரி ஒண்ணு வந்ததே என்று சந்தோஷப் படுகிறேன். தக்கபடி பதில் கொடுத்தால் போச்சு.''

அப்படியே பிரபல வழக்குரைஞர் வி. வி. சீனிவாச அய்யங்கார் மூலம் பதில் போயிற்று — மன்னிப்புக் கேட்கவோ, நஷ்ட ஈடு கொடுக்கவோ முடியாது என்பதாக.

அதன் பேரில் பாகவதர் வழக்குத் தொடராமல் போகவே, முன்பு நாடகத்தில் நேர்ந்த ஏமாற்றம் போல் ஆயிற்று.

''அவர் கேஸ் போடா விட்டாலும் நீங்கள் இதைப் பற்றி நம்ம பத்திரிகையிலே எழுதி வாசகர்களுக்குக் கொஞ்சம் பரபரப்பு ஊட்டுங்கள்'' என்று வாசன் சொன்னார்.

அதன்படியே கல்கி, மே மாதம் பத்தாம் தேதி இதழில் ''உபய குசலோபரி''. பத்தியின் மூலம் சுவையாக ஊட்டினார். அதைத்தொடர்ந்து அவர், வாசனின் விருப்பப்படியும், தமது இச்சைப்படியும் தமது பே(ன

கல்கி அவர்களுடன் கருத்து மோதல் செய்து பெருமையுற்ற ஈ. கிருஷ்ணய்யர், ஸ்ரீ கே. வி. ராமச்சந்திரன்.

வால் இயன்றவரை, வெவ்வேறு வாதங்கள், பிரதிவாதங்கள் மூலம் பரபரப்பை ஊட்டிக்கொண்டே இருந்தார்.

மிக்க பரபரப்பை ஊட்டிய கடும் விவாதம் ஒன்று, கர்நாடகமும் கர்நாடக சங்கீதமும் சம்பந்தப்பட்டதாய், 1934 மே மாதம் இறுதியில் தொடங்கி மறு மாதம் முழுதும் தொடர்ந்தது. கல்லிடைக்குறிச்சி இராமலிங்கய்யரின் கச்சேரியைப் பற்றிக் கர்நாடகம் எழுதிய விமரிசனம் ஒன்று அதை மூட்டி விட்டது. அந்தப் பாகவதரின் அங்க சேஷ்டைகள் பிரசித்தமானவை. அவற்றைக் கர்நாடகம் அப்போதுதான் முதல் தடவையாகக் காண நேர்ந்ததால், அவைகளைப் பிரதானமாய்க் குறிப்பிட்டும், பரிகாசம் செய்தும் எழுதினர் :

ஸ்வாமிகளே! நானும் எவ்வளவோ சங்கீத வித்வான்களையும் அவர்களுடைய அங்க சேஷ்டைகளையும் பார்த்திருக்கிறேன். ஆனால் கல்லிடைக் குறிச்சி வேதாந்த பாகவதரின் சகோதரர் இராமலிங்கய்யரைப் போல் அங்க சேஷ்டையின் சிகரத்தை அடைந்தவரை இதற்கு முன் பார்த்தது கிடையாது. இந்த அம்சத்தில் அவர் சாக்ஷாத் டைகர் வரதாச்சாரியாரைக் கூடத் தோற்கடித்து முதுகில் மண் காட்டக் கூடியவராயிருக்கிறார் என்றால், வேறு என்ன சொல்ல வேண்டும் ?....

இவருடைய கச்சேரி சம்பந்தமாக ஒரு விஷயத்தில் நான் அபிப்பிராயப் பேதப்படுகிறேன். அதாவது அதைச் ''சங்கீதக் கச்சேரி'' என்று சொல்வது பொருத்தமில்லை என்று நினைக்கிறேன். ''ஸ்வரங்களின் மகா யுத்தம்'' என்று சொல்வது ஒரு வேளை பொருத்தமாய் இருக்கலாம். கச்சேரி ஆரம்பிப்பதற்கு முன்னால் பார்த்தால் மனுஷ்யர் வைதிகக் குடுமியுடன், கதர்ச் சட்டை போட்டுக் கொண்டு பரம சாதுவாய்க் காணப்படுகிறார். கச்சேரி ஆரம்பித்துவிட்டாலோ, அடே அப்பா ! என்ன மாறுதல் ! அந்த ஸ்வரங்கள்தான் அவரிடம் என்ன பாடுபடுகின்றன! ''நில்லு, அங்கேயே!'' என்று இரண்டு கையாலும் தடுத்து நிறுத்துகிறார் ஒரு சமயம். ''வந்துடு இங்கே!'' என்று இரு கைகளாலும் அணைத்துப் பிடித்துத் தலையோடு தலை முட்டவிடுகிறார் இன்னொரு சமயம். மற்றொரு சமயம் பேயறைவது போல் ஒரே அறையாய் அறைகிறார். அப்புறம், ஸ்வரங்களை உரலில் போட்டு உலக்கை கொண்டு அவல் இடிப்பது போல் இடிக்கிறார். பின்னர், வில்லில் நாணேற்றிக் காதளவு இழுத்து வாங்கிப் பாணப் பிரயோகம் செய்கிறார். பிறகு கழுத்தைப் பிடித்து நெட்டுகிறார். கோபம் மித மிஞ்சிப் போய்விட்டாலோ, ''இதோ வேருடன் கல்லி எறிந்து விடுகிறேன் பார் !'' என்று சொல்லி இரண்டு கையையும் கீழே கொடுத்து வேரைப் பறிக்கிறார். நல்ல வேளையாக, மேடையில் உட்கார்ந்திருந்தாரோ, கான மந்திரத்தின் தரை பிழைத்ததோ ! தரையில் மட்டும் உட்கார்ந்திருந்தால், நிச்சயமாகப் பெரிய குழி ஒன்று தோண்டியிருப்பார், பாவம் !

சங்கீத வித்வான்களிடம் அங்க சேஷ்டைகளை நான் அதிகமாய் ஆட்சேபிப்பதாக நேயர்கள் எண்ணக் கூடாது. மற்ற அம்சங்களில் சங்கீதம் சரியாயிருந்தால், அங்க சேஷ்டைகளை நாம் பொருட்படுத்த வேண்டியதே இல்லை. சில சமயங்களில் அங்க சேஷ்டைகள் சங்கீதத்துக்கு ஜீவ சக்தி அளிக்கின்றன என்றுகூடச் சொல்லலாம். ஆகவே, இராமலிங்கய்யரின் சேஷ்டைகள் மிக வேடிக்கையாய் இருப்பது பற்றி எடுத்துக் காட்டினேனேயல்லாமல், அவைகளைக் குறித்துக் குறை கூறவில்லை. நான் சொல்லுவதெல்லாம், ''சங்கீதத்தின் ஜீவன் எதுவென்று இராமலிங்கய்யர் அறிந்து கொள்ளவில்லை'' என்பதே.

நல்ல சங்கீதத்துக்கு முக்கியமாக இரண்டு அம்சங்கள் பொருந்தி இருக்க வேண்டும் என்பதை நேயர்கள் அறிவார்கள். ஒன்று, இன்னிசை ; மற்றொன்று, பாவம் (அதாவது ஸாஹித்தியத்தின் பொருளுக்கேற்ற உணர்ச்சியுடன் பாடுதல்.) இவ்விரண்டும் இராமலிங்கய்யரின் பாட்டில் கிடையாது.

(ஆ. வி. 20-5-34)

இதே விமரிசனத்தில் இன்னொரு பகுதியில், ''அந்த மனுஷ்யர் வெகு நிபுணர்'' என்று வர்ணித்தார் — ராகங்களை ஒளித்து வைப்பதில்! ''சர்வ சாதாரணமாய் எல்லோருக்கும் தெரியக் கூடிய தோடி ராகத்தைக்கூட வெகு வாக மறைத்து வைக்க முயன்றார். ஆனால் என்னிடம் இந்த வேலைத்தனமெல்லாம் பலிக்குமா? எப்படியோ கண்டு பிடித்து விட்டேன்.''

இதைத் தொடர்ந்து இன்னும் ஒன்று:

கீர்த்தனங்களின் விஷயத்திலும் அவர் இந்தச் சாமர்த்தியத்தைக் காண்பித்தார். அதாவது, அவர் பாடுவது என்ன கீர்த்தனம், அவர் உச்சரிப்பது என்ன வார்த்தைகள் என்பதை நம்முடைய பாட்டன்மார்களால்கூட கண்டுபிடிக்க முடியாதென்றால், நம்மால் முடியாது என்று சொல்ல வேண்டியதில்லை. உதாரணமாக, அவருடைய கீர்த்தனம் ஒன்று பின்வருமாறு என் காதில் விழுந்தது :

பல்லவி

ஜஜஜஜ ஜஜஜஜ ஜா ஜா ஜா

அனுபல்லவி

பபப பபப பபப பாப பாப

பூபூ பூபூ பூபூபூ புப்புப் பூ

---



மனைவி: குழந்தையைக் கொஞ்ச நாழிகை பார்த்துக் கொள்ள உங்களால் முடியல்லியே, அழுகிறானே! அம்மா வந்து பாட்டுப் பாடித் தூங்கப் பண்ணுவான்னு சமாதானமாச் சொல்லுங்கோ!

கணவன்: அப்படிச் சொல்லிப் பயமுறுத்தியுங்கூட அவன் அழுகையை நிறுத்த மாட்டேனென்கிறானே, நான் என் செய்வேன்?

- விஜயம்

சரணம்
கொ கொ கொ கொ கொ கோகொக்கோ
சிசி சிசிசிசி சிசச்சி

இதை அப்போது படித்த வாசகர்களில் ஒரு பகுதியினர் ''சபாஷ்'' போட்டுச் சிரித்திருப்பார்கள்; இன்னொரு பகுதியினர் ''ஐயோ பாவம்'' என்று பாகவதரின்பால் அனுதாபம் கொண்டிருப்பார்கள். சங்கீத வட்டாரங்களில் கண்டனக் குரல்கள் எழுந்திருக்கும்.

பத்திரிகைகளின் வாயிலாகக் கண்டனம் தெரிவித்தவர்களில் ஈ. கிருஷ்ணையர் ஒருவர். சாதாரணமானவர் அல்ல அவர். அவருடைய எதிர்வாதங்களை வெளியிட்ட பத்திரிகை வர்ணித்தது போல் ''தென்னிந்தியச் சங்கீத உலகில் முக்கியமான ஒரு ஸ்தானம்'' வகித்தவர். அதற்குச் சில மாதங்களுக்கு முன்னால், உடன் காலத்து இசைக் கலைஞர்கள் பற்றி ஆங்கிலத்தில் புத்தகம் ஒன்றை வெளியிட்டிருந்தவர். அந்தப் புத்தகத்துக்குக் கல்கி விரிவானதொரு விமரிசனம் எழுதியிருந்தார். அதிலே கலை உலகத்துக்குக் கிருஷ்ணையர் செய்திருக்கும் அரிய தொண்டுகளுக்குச் சிகரம் போன்றது அந்தப் புத்தகம் எனப் பாராட்டி இருந்தார். பரத நாட்டியக் கலையில் கல்கிக்குப் பிரியம் உண்டாகக் காரணமாய் இருந்தவர்களிலும் ஒருவர் அவர்.

அப்பேர்ப்பட்டவர் கல்கியுடன் சொற்போர் தொடுத்தார். அவர் ஆங்கிலத்திலேயே எழுதிக் கொண்டிருந்துவிட்டுத் தமிழில் எழுதத் தொடங்கியதால் அவருடைய எதிர்வாத வாக்கியங்கள் தெளிவற்றிருந்தன. இதை மனத்தில் வைத்துக் கொண்டு, பாகவதரின் அங்க சேஷ்டைகள் பற்றிய கல்கியின் பரிகாசத்துக்கு எதிராக, அவர் எழுதிய வாக்கியங்களில் ஒன்றைப் பார்ப்போம்:

''அங்க சேஷ்டைகளைக் கண்டு அதனால் அவ்விடம் சங்கீதமே இல்லையென்று மருண்டோடுபவர்களுடைய புத்திமதியில் (கர்நாடகம்) ஏமாந்திருந்தாலும் இருக்கலாம்.''

இப்படிச் சொன்ன கிருஷ்ணையரே, ராமலிங்க பாகவதரின் அங்க சேஷ்டைகளைக் கேலிசெய்து எழுதியிருந்தார்—கர்நாடகத்தின் விமரிசனம் வெளியான அதே தேதியில் இன்னொரு பத்திரிகையில் பிரசுரமான அவருடைய விமரிசனத்தில்: ''...தனது அளவற்ற அங்க விகாரங்களால் பார்ப்போரைச் சிரிக்கவும் செய்தார். ஒரு திரைக்குள் அவரை மறைத்து நேரில் காணாது பாட்டை மாத்திரம் கேட்க வேண்டும் போலிருந்தது. அல்லது அவரது இரு கைகளையும் பின்புறம் கட்டி, தலையையும் அவருடன் இசைத்தால்தான் அச்சேஷ்டைகள் குறையும் போலிருந்தன.''

தான் கேலி செய்யலாம் பிறர் செய்யக் கூடாது என்ற விசித்திர மனப்பான்மை!

அந்த விவாதத்தில் சங்கீதத்தின் பொதுவான இலட்சணங்கள் பற்றியும், நுட்பமான அம்சங்கள் பற்றியும் வெகுவாகக் கருத்துப் பரிமாற்றம் நடந்தது. அதனிடையே ''பாவம்'' என்பது பற்றிக் கர்நாடகம் வெளியிட்ட கருத்துக் குறிப்பிடத் தக்கதாய் இருந்தது. அதன் சுருக்கமாவது:

சங்கீதத்தில் பாவம் என்று சொல்கையில் அதை ராக பாவம் என்றும் அர்த்த பாவம் என்றும் தனித் தனியே பிரிப்பது தவறு. அர்த்த பாவம் என்று தனியாக ஒன்று சங்கீதத்தில் கிடையாது. அர்த்த பாவத்தை மட்டும் அநுபவிப்பதற்கு நாம் டிக்கட் வாங்கிக் கொண்டு சங்கீதக் கச்சேரிக்குப் போய்க் கூட்டத்தில் இடிபட்டு மூச்சுத் திணற வேண்டியதில்லை. நல்ல கவிதைப் புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு திறந்தவெளியில் உட்கார்ந்து படிக்கலாம். ''பாவம்'' என்று நான் தனிப்படச் சொல்லும்போது, சாகித்யத்தின் அர்த்தத்துக்குப் பொருத்தமாய் ராக பாவம் அமைந்திருக்கும் பாட்டை, அவ்விரண்டு அம்சங்களும் தோன்றுமாறு உணர்ச்சியுடன் பாடும் திறமையையே குறிப்பிடுகிறேன்.

அந்த விவாதத்தின் போது, இருதரப்பாரும் வாதச் சொற்களுடன் ஏசல் சொற்களையும் மனக் கொதிப்பினால் வீசிக் கொண்டார்கள். ராமலிங்க பாகவதரின் அங்க சேஷ்டைகளைக் கேலி செய்த கர்நாடகத்துக்கே சில சேஷ்டைகள் உண்டு என்று கிருஷ்ணையர் சொல்லி, அவர் கும்பிடு போடும் விதத்தையும், கைவிரல்களை அடிக்கடி மேஜை மீது அழுத்தி மடக்கிச் சொடுக்குப் போடுவதையும் பிரமாத உதாரணங்களாய்க் குறிப்பிட்டார். அதற்குக் கல்கி அதே விதத்தில் பதில் கொடுக்கவில்லைதான். ஆனால் மிகக் காரமான இன்னொன்றைச் சொன்னார்: தாம் எழுதியிருந்த வாக்கியம் ஒன்றை மற்றவர் சரியாய்ப் படித்துப் புரிந்து கொள்ளவில்லை என்பதைக் கல்கி சுட்டிக்

---

விருந்தாளி: நேற்று காலை வேலைக்காரனிடம் ஒரு வேஷ்டியைத் தோய்க்கச் சொல்லி விட்டு வந்தேன். இன்னும் அது கல்லின் மேல் வைத்தது வைத்தபடியிருக்கிறது.

வீட்டுக்காரர்: (ஏதோ ஞாபகத்தில்) அவன் ரொம்ப நல்லவனுச்சே! பிறத்தியார் பொருள் எதையுமே தொட மாட்டானே!

- விநயம்



காட்டுகையில், கண்ணுெம்பு இருந்தால் அதைக் கண்ணில் போட்டுக் கொண்டு மறுபடியும் அந்த வாக்கியத்தைப் படித்துப் பார்க்கும்படி சொன்னார்.

(இந்த விவாதத்தில் தம்முடன் மோதிய இதே கிருஷ்ணையரைக் கல்கி, தமது சொந்தப் பத்திரிகையில் வானொலி நிகழ்ச்சிகளை விமரிசனம் செய்யும்படி அழைத்தார். அதற்கு இணங்க அவரும் "இசைத் தேனீ"யாக, சுமார் மூன்றரை வருட காலம், வாராவாரம் "வான சஞ்சாரம்" செய்தார். அந்தப் பகுதி, 1944 ஆகஸ்டு 13ம் தேதி இதழில் தொடங்கியபோது, அவரைக் கல்கி அறிமுகப்படுத்துகையில், அவர் சங்கீதக் கலைக்காகவே பிறந்து வளர்ந்து உயிர் வாழ்பவர் என்றும், சங்கீத சாகித்யங்களில் சிறந்த அநுபவஞானம் படைத்தவர் என்றும் வர்ணித்தார்.)

இனி, இசையும் இலக்கியமும் சம்பந்தப்பட்ட ஒரு விவாதம்.

1939ல், அப்போது "ஹிந்து" பத்திரிகையின் சங்கீத விமரிசகராய் இருந்த கே. வி. ராமச்சந்திரன், நற்கலைகளுக்கென்றே தனியாக, "சில்பஸ்ரீ" என்ற சஞ்சிகை ஒன்றைத் தொடங்கி நடத்தினார். அதன் முதல் இதழை, ஆனந்த விகடனில் கல்கி விமரிசனம் செய்து எழுதினார் — பெரும்பாலும் பாராட்டாகவே.

மறு வருடம் ஜனவரி இறுதியில், திருச்சி வானொலி, "அபூர்ண ராம நாடகம்" என்ற பாடல் நிகழ்ச்சி ஒன்றை ஒலிபரப்பிற்று. அந்த நாடகத்தைத் தொகுத்து அளித்தவர், "சில்பஸ்ரீ" ஆசிரியர் ராமச்சந்திரன்.

அந்த நாடகத்துக்கும் கல்கி விமரிசனம் எழுதினார். ஆ.வி. பிப்ரவரி இரண்டாம் தேதி இதழில் வெளியான அதில் குணங்களுடன் சில குற்றங்களையும் அவர் சுட்டிக் காட்டினார். அவை குற்றங்கள் அல்ல என்று ராமச்சந்திரன் வாதிட்டு, தமது பத்திரிகையில் பதில் எழுதினார். அதைக் கல்கி ஒப்புக்கொள்ளாமல் தமது கட்சியை வலியுறுத்தினார்; ராமச்சந்திரனும் மேலும் எதிர் வாதம் செய்தார். அப்படியே தொடர்ந்து கொண்டு போயிற்று விவாதம்.

அந்த விவாதத்துக்கு உள்ளான எல்லாக் கருத்துக்களையும் இங்கே கவனிப்பது சாத்தியமல்ல. ஆதலால், அவற்றில் மாதிரிக்கு ஒன்றே ஒன்றை மட்டும் எடுத்துக் கொள்வோம். அது பற்றிய இருவரின் கருத்துக்களையும் "ரத்தினச் சுருக்கம்" செய்து, அடுத்தடுத்துப் பொருத்திப் பார்ப்போம்— கல்கியின் விமரிசனத்துடன் தொடங்கி:

...அது அபூர்ணமாய் இருந்ததோடு அபூர்வமாகவும் இருந்தது. தியாகராஜ ஸ்வாமிகள் ஸ்ரீராமபிரானைப் பற்றியே பெரும்பாலான கீர்த்தனங்களைப் பாடியிருக்கிறார் அல்லவா? அவற்றுள், ராமாயண கதா சம்பவங்கள் வரும் பாட்டுக்களைப் பொறுக்கி, அந்தந்தப் பாத்திரங்கள் பாடுவது போல் இந்த நாடகம் அமைக்கப்பட்டிருந்தது. ஒவ்வொரு பாட்டுக்கும் முன்னால், அதன் கருத்தை வெகு அழகாகத் தமிழில் எடுத்துச் சொன்னார்கள். ஒவ்வொரு பாட்டிலும் இன்னின்ன ரஸம் அமைந்திருக்கிறது என்றும் தெரிவித்தார்கள். "இதில் பயானகரஸம், இதில் சிருங்கார ரஸம், இதில் அற்புத ரஸம், இதில் மைசூர் ரஸம்" என்பதாக எடுத்துச் சொல்லிக் கொண்டு வந்தது வெகு ரஸமாயிருந்தது.

ஆனால், ஒவ்வொரு கீர்த்தனத்துக்கும் அளிக்கப்பட்டிருந்த கட்டம் அவ்வளவு பொருத்தமாய் இருந்ததென்று சொல்வதற்கில்லை. உதாரணமாக, "ரார ஸீதா ரமணீ மனோகரா" என்ற கீர்த்தனத்தைச் சூர்ப்பனகை ராமனைப் பார்த்துப் பாடியதாகச் சொன்னார்கள். சூர்ப்பனகை அழகான உருவம் கொண்டு வந்ததாக ராமாயணத்தில் படித்திருக்கிறோம். அவள் திவ்யமான சாரீரத்துடனும் வந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. "ராஆஆர ஸீதா...." என்று அவள் கொஞ்சிக் கொண்டு பாடிய



**ஸாண்ட்விச்**

இரு ரொட்டித் துண்டங்களுக்கு இடையில் பாலாடைக் கட்டி, காய்கறி, முட்டை அல்லது இறைச்சித் துண்டத்தை வைத்து உண்பார்கள். இப்படித் தயாராகும் உணவுப் பண்டத்துக்கு ஸாண்ட்விச் என்ற பெயர் வழங்குகிறது அல்லவா? ஏன் இப் பெயர் ஏற்பட்டது?

ஸாண்ட்விச் பிரபுவுக்குச் சீட்டாட்டத்தில் மட்டில்லா ஆசை. அதை நிறுத்திவிட்டு இரவு உணவை உண்பதற்குக்கூட அவருக்கு நேரமில்லை! ஆகவே அவரது சௌகரியத்துக்காக மேற்படி உணவுப் பண்டத்தைத் தயாரித்து அதற்கு அவர் பெயரையே இட்டார்கள். இந்த உலகுக்கு அவர் செய்த நல்ல காரியம் இது ஒன்றுதான்! சீட்டாடியபடியே சாப்பிட அவருக்கு வசதியாக இருந்தது ஸாண்ட்விச். இன்றோ அவசர ஜோலியாகக் கிளம்புகிறவர்கள் சாப்பிட நேரமில்லாமல் காரியம் பண்ணுகிறவர்கள் எல்லாரும் சட்டென்று சாண்ட்விச் தயாரித்துக் கொள்கிறார்கள்.

- சுதந்திரத் தியாகிகள் என்ற நூலிலிருந்து

---

டாக்டர்: ஐ ஆம் சாரி மேடம். உங்கள் கணவர் தூக்கத்தில் உளறுவதை என்னால் தடுக்க முடியாது.

மனைவி: பரவாயில்லை. அவர் உளறுவதைத் தெளிவாக உளற மருந்து கொடுத்தால் போதும்.

— சரஸ்வதி பந்த





**ஸ்ரீ நன்றுடையான் விநாயகர்**

திருச்சி டவுன் புகைவண்டி நிலையத்துக்கு அருகில் உள்ளது ஸ்ரீ நன்றுடையான் விநாயகர் ஆலயம்.

இத்திருக்கோயில் திருப்பணி இப்பொழுது நடைபெற்று வருகிறது. 14-7-75 திங்கட்கிழமை அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறுவதாயிருக்கிறது. இத்திருப்பணிக்குப் பொருளுதவி செய்ய விரும்பும் அன்பர்கள் ஸ்ரீ கே. எஸ். அப்பாசாமி அய்யர், செயலாளர், நன்றுடையான் விநாயகர் திருப்பணிக் குழு, 12-பி, டவுன் ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. என்ற முகவரியோடு தொடர்பு கொள்ளலாம்.

போது ராமர் அப்படியே சொக்கிப் போகாதது ஆச்சரியமே !

ஆனால், இந்தப் பாட்டைச் சூர்ப்பனகை எப்படிப் பாடி இருக்க முடியும் என்று யோசிக்க வேண்டும். ஸீதையைப் பற்றிச் சூர்ப்பனகை அவ்வளவு இனிய வார்த்தைகளைச் சொல்லி இருப்பாளா ? ''ஸீதா ரமணியின் மனோகரனே ! என்னிடம் வா!'' என்று அவள் ராமனைப் பார்த்துச் சொல்லி இருப்பாள் ?...

ராமச்சந்திரன் பதில்:

நிச்சயமாய் அப்படிச் சூர்ப்பனகை சொல்லி இருப்பாள். சீதையின் அழகைச் சூர்ப்பனகை வியந்தாள் என்பதற்குப் ''பண்புற இனிது நோக்கி'' என்னும் கம்பன் பாட்டு சான்று.

கல்கி :

கம்பன் பாட்டில் ''பண்புற இனிது நோக்கி'' என்றிருப்பது ரொம்பச் சரி. சூர்ப்பனகை சீதையின் அழகை மனத்துக்குள் வியக்கவில்லை என்று யார் சொன்னார்கள் ? அவள் ராமனிடம் என்ன சொன்னாள் என்பதல்லவா கேள்வி? ''மாயம் வல்லவள்'', ''வஞ்சனை அரக்கி'', ''நற்பொறை நெஞ்சிலாக் கள்வி'' என்றெல்லாம் அவள் திட்டியதாகத்தான் கம்பர் சொல்கிறார். சீதையின் அழகை இராமனிடம் அவள் வர்ணிக்கவும் இல்லை; வியந்து பேசவும் இல்லை.

வால்மீகி இராமாயணந்தான் இந்த இடத்தில் என்ன சொல்கிறது ?

''விகாரமானவளும் குரூபியுமான இவள் (சீதை) உனக்குத் தகுந்தவளே அல்ல. நான்தான் உனக்குத் தகுந்த பாரியை....'' என்று சூர்ப்பனகை ராமனிடம் கூறியதாகவே வால்மீகி சொல்கிறார்.

ராமச்சந்திரன் :

இந்தப் பாட்டைச் சூர்ப்பனகை சொல்லி இராவிட்டால் வேறு யார் சொல்லியிருக்க முடியும் ? சீதை சொல்லியிருக்க முடியாது. ராமாயணத்தில் 'வேறெந்தப் பெண்ணும் ராமரை மோகிக்கவில்லை. அப்படி மோகித்துப் பாடியிருக்கக் கூடியவள் சூர்ப்பனகை ஒருத்தியே !

கல்கி :

ராமாயணத்தில் வரும் யாராவது ஒரு ஸ்திரீதான் இதைச் சொன்னாள் என்று ஏன் வைத்துக் கொள்ள வேண்டும் ? ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி, நாயக நாயகி பாவத்தில் பிரேம பக்தியினால் இந்தக் கீர்த்தனத்தைப் பாடினார் என்று ஏன் கொள்ளக் கூடாது ?

ராமச்சந்திரன் :

சீதை விஷயத்தில் சூர்ப்பனகை அசூயைப் பட்டாளோ இல்லையோ, இந்த விமர்சக ரூபம் கொண்ட சூர்ப்பனகை, இந்த ராமச்சந்திரனிடம் பகைமையும் பொறாமையும் கொண்டாள் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை.

கல்கி :

ஒருவருக்கு யார் பேரில் அதிகப் பிரியமோ, அவருடைய உருவத் தோற்றம் எங்கும் தோன்றுவது இயல்பு. இராவணனுக்குச் சீதையாகத் தோன்றிய உருவெளித் தோற்றம், சூர்ப்பனகைக்கு இராமனாகத் தோன்றியதல்லவா? ஸ்ரீ கே. வி. ராமச்சந்திரனுக்கு சூர்ப்பனகையின் மேல் உள்ள அபாரப் பிரியம் தான், என்னை அவருக்குச் சூர்ப்பனகையாய்த் தோன்றச் செய்திருக்கிறது......

கல்கியே சில வாரங்களுக்குப் பிறகு :

''சில்ப ஸ்ரீ'' பத்திரிகை அப்புறம் வந்ததா என்று சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள். வந்திருக்கிறது என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ''சில்பஸ்ரீ'' ஓராண்டு வாழ்வுடன் ''அல்ப ஸ்ரீ''யாகப் போகாமல் இருந்ததற்கு ஓரளவு நானும் உதவி செய்தேன் என்பதை நினைக்கும்போது எவ்வளவோ சந்தோஷமாய் இருக்கிறது.

சில பத்திரிகைகள், வருஷப் பூர்த்தியின் போது, ஆண்டு மலர் வெளியிடுவதுண்டு. ''சில்பஸ்ரீ''யின் இந்தப் புது வருஷ இதழ் சூர்ப்பனகை மலராக வெளி வந்திருக்கிறது. பத்திரிகையைப் பிரித்ததும் சூர்ப்பனகை விஷயம்தான். அப்புறமும், அதற்கு அப்புறமும் சூர்ப்பனகைதான். சூர்ப்பனகையின் பாக்கியமே பாக்கியம்! அந்த ராமச்சந்திரனிடம் அவளுடைய மாயம் பலிக்காவிட்டாலும், இந்த ராமச்சந்திரனுடைய மனத்தை எப்படிக் கவர்ந்திருக்கிறாள் !

கல்கி சம்பந்தப்பட்ட வேறு சில விவாதங்களைப் போலவே, இதையும் பலர் இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். (தொடரும்)

---



மனைவி: அடுத்த வீட்டு மீனுவுக்கும் எனக்கும் மனஸ்தாபம். இப்பொழுது எங்களுக்குள் பேச்சு வார்த்தையே கிடையாது.

கணவன்: நல்ல காரியம் செய்தீர்கள். இரண்டு பேரும் கொஞ்ச காலத்துக்குச் சிரமபரிகாரம் செய்து கொள்ளுங்கள். - விஜயம்



**ஸ்ரீ நன்றுடையான் விநாயகர்**

திருச்சி டவுன் புகைவண்டி நிலையத்துக்கு அருகில் உள்ளது ஸ்ரீ நன்றுடையான் விநாயகர் ஆலயம்.

இத்திருக்கோயில் திருப்பணி இப்பொழுது நடைபெற்று வருகிறது. 14-7-75 திங்கட்கிழமை அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறுவதாயிருக்கிறது. இத்திருப்பணிக்குப் பொருளுதவி செய்ய விரும்பும் அன்பர்கள் ஸ்ரீ கே. எஸ். அப்பாசாமி அய்யர், செயலாளர், நன்றுடையான் விநாயகர் திருப்பணிக் குழு, 12-பி, டவுன் ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. என்ற முகவரியோடு தொடர்பு கொள்ளலாம்.

போது ராமர் அப்படியே சொக்கிப் போகாதது ஆச்சரியமே !

ஆனால், இந்தப் பாட்டைச் சூர்ப்பனகை எப்படிப் பாடி இருக்க முடியும் என்று யோசிக்க வேண்டும். ஸீதையைப் பற்றிச் சூர்ப்பனகை அவ்வளவு இனிய வார்த்தைகளைச் சொல்லி இருப்பாளா ? ''ஸீதா ரமணியின் மனோகரனே ! என்னிடம் வா!'' என்று அவள் ராமனைப் பார்த்துச் சொல்லி இருப்பாள் ?...

ராமச்சந்திரன் பதில்:

நிச்சயமாய் அப்படிச் சூர்ப்பனகை சொல்லி இருப்பாள். சீதையின் அழகைச் சூர்ப்பனகை வியந்தாள் என்பதற்குப் ''பண்புற இனிது நோக்கி'' என்னும் கம்பன் பாட்டு சான்று.

கல்கி :

கம்பன் பாட்டில் ''பண்புற இனிது நோக்கி'' என்றிருப்பது ரொம்பச் சரி. சூர்ப்பனகை சீதையின் அழகை மனத்துக்குள் வியக்கவில்லை என்று யார் சொன்னார்கள் ? அவள் ராமனிடம் என்ன சொன்னாள் என்பதல்லவா கேள்வி? ''மாயம் வல்லன்'', ''வஞ்சனை அரக்கி'', ''நற்பொறை நெஞ்சில்லாக் கள்வி'' என்றெல்லாம் அவள் திட்டியதாகத்தான் கம்பர் சொல்கிறார். சீதையின் அழகை இராமனிடம் அவள் வர்ணிக்கவும் இல்லை; வியந்து பேசவும் இல்லை.

வால்மீகி இராமாயணந்தான் இந்த இடத்தில் என்ன சொல்கிறது ?

''விகாரமானவளும் குரூபியுமான இவள் (சீதை) உனக்குத் தகுந்தவளே அல்ல. நான் தான் உனக்குத் தகுந்த பாரியை....'' என்று சூர்ப்பனகை ராமனிடம் கூறியதாகவே வால்மீகி சொல்கிறார்.

ராமச்சந்திரன் :

இந்தப் பாட்டைச் சூர்ப்பனகை சொல்லி இராவிட்டால் வேறு யார் சொல்லியிருக்க முடியும் ? சீதை சொல்லியிருக்க முடியாது. ராமாயணத்தில் 'வேறெந்தப் பெண்ணும் ராமரை மோகிக்கவில்லை. அப்படி மோகித்துப் பாடியிருக்கக் கூடியவள் சூர்ப்பனகை ஒருத்தியே !

கல்கி :

ராமாயணத்தில் வரும் யாராவது ஒரு ஸ்திரீதான் இதைச் சொன்னாள் என்று ஏன் வைத்துக் கொள்ள வேண்டும் ? ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி, நாயக நாயகி பாவத்தில் பிரேம பக்தியினால் இந்தக் கீர்த்தனத்தைப் பாடினார் என்று ஏன் கொள்ளக் கூடாது ?

ராமச்சந்திரன் :

சீதை விஷயத்தில் சூர்ப்பனகை அசூயைப் பட்டாளோ இல்லையோ, இந்த விமர்சக ரூபம் கொண்ட சூர்ப்பனகை, இந்த ராமச்சந்திரனிடம் பகைமையும் பொறாமையும் கொண்டாள் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை.

கல்கி :

ஒருவருக்கு யார் பேரில் அதிகப் பிரியமோ, அவருடைய உருவத் தோற்றம் எங்கும் தோன்றுவது இயல்பு. இராவணனுக்குச் சீதையாகத் தோன்றிய உருவெளித் தோற்றம், சூர்ப்பனகைக்கு இராமனாகத் தோன்றியதல்லவா? ஸ்ரீ கே. வி. ராமச்சந்திரனுக்கு சூர்ப்பனகையின் மேல் உள்ள அபாரப் பிரியம் தான், என்னை அவருக்குச் சூர்ப்பனகையாய்த் தோன்றச் செய்திருக்கிறது......

கல்கியே சில வாரங்களுக்குப் பிறகு :

''சில்ப ஸ்ரீ'' பத்திரிகை அப்புறம் வந்ததா என்று சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள். வந்திருக்கிறது என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். ''சில்பஸ்ரீ'' ஓராண்டு வாழ்வுடன் ''அல்ப ஸ்ரீ''யாகப் போகாமல் இருந்ததற்கு ஓரளவு நானும் உதவி செய்தேன் என்பதை நினைக்கும்போது எவ்வளவோ சந்தோஷமாய் இருக்கிறது.

சில பத்திரிகைகள், வருஷப் பூர்த்தியின் போது, ஆண்டு மலர் வெளியிடுவதுண்டு. ''சில்பஸ்ரீ''யின் இந்தப் புது வருஷ இதழ் சூர்ப்பனகை மலராக வெளி வந்திருக்கிறது. பத்திரிகையைப் பிரித்ததும் சூர்ப்பனகை விஷயம்தான். அப்புறமும், அதற்கு அப்புறமும் சூர்ப்பனகைதான். சூர்ப்பனகையின் பாக்கியமே பாக்கியம்! அந்த ராமச்சந்திரனிடம் அவளுடைய மாயம் பலிக்காவிட்டாலும், இந்த ராமச்சந்திரனுடைய மனத்தை எப்படிக் கவர்ந்திருக்கிறாள் !

கல்கி சம்பந்தப்பட்ட வேறு சில விவாதங்களைப் போலவே, இதையும் பலர் இன்னமும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். (தொடரும்)

---



மனைவி: அடுத்த வீட்டு மீனுவுக்கும் எனக்கும் மனஸ்தாபம். இப்பொழுது எங்களுக்குள் பேச்சு வார்த்தையே கிடையாது.

கணவன்: நல்ல காரியம் செய்தீர்கள். இரண்டு பேரும் கொஞ்ச காலத்துக்குச் சிரமபரிகாரம் செய்து கொள்ளுங்கள்.

- விஜயம்

# கட்சி மாறும் பட்சி

கதை: குட்டி கிருஷ்ணன்

படம்: "ராஜ்"

14


















மறு நாள் காலை கீதா மெல்லக் கண் விழித்தாள்.

யாரு? கேடி சொக்கப்பனா? அவர் எங்கே?

குளிச்சு, சாமி கும்பிட்டுட்டு வாரேன்னு இப்பத்தான் போனார்.
















முற்றும்

தெரு முனையில் இருக்கும் கல்யாணச் சத்திரத்திலிருந்து நாதசுவர இசை காற்றில் மிதந்து வருகிறது — இன்று பாமாவுக்குக் கல்யாணம்! பாமாவுக்கு இருபது வயசிருக்குமா? —

அவ்வளவுதான் இருக்க முடியும். கலோசனாவை விட அவளுக்கு இரண்டு வயசு அதிகமாக இருக்கலாம். அவள் இரண்டு வகுப்புகள் முன்னோடியாக இருந்தாள் என்று நினைவு.

ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த கலோசனா, கல்யாணச் சத்திரத்துக்குள் நுழைந்து விட்டுப் போவதா, அல்லது சாயங்காலம் 'ரிஸப்ஷ'னில் கலந்து கொண்டால் போதுமா என்று ஒரு கணம் யோசித்தாள்.

'இப்போது போனால் அக்காவையும் அழைத்துக் கொண்டு போகலாம்' என்ற நினைப்பைத் தொடர்ந்து, 'அப்பா, அக்காவுக்கு எப்போதுதான் கல்யாணம் பண்ணப் போகிறாரோ?' என்ற நினைப்பும் கூடவே எழுந்தது.

'அவள் இப்போ எங்கே கிளம்பப் போகிறாள்? அப்பா சாப்பிட உட்கார்ந்திருப்பார். அவள் சமையலை ரசித்து ரசித்துச் சாப்பிடும் அவர் எழுந்திருக்க இன்னும் அரை மணி நேரமாகும். தன் சமையலை அப்பா ரசிக்கும் பெருமையில் பூரித்துப் போய்த் தன் பசிகூடத் தெரியாமல் நின்று கொண்டிருப்பாள், அவள்!

கையில் 'ஹாண்ட் பேக்'குடன் சமையற்கட்டுப் பக்கம் வந்தாள் கலோசனா. அவள் நினைத்தது அப்படியே அங்கே நடந்து கொண்டிருந்தது.

''உன் சமையலைச் சாப்பிடுவதற்காக வேணும் பகவான் எனக்கு நிறைய ஆயுசைக் கொடுக்கணும், ரமா!'' — என்று கூறிக் கொண்டே கையில் ரசத்தை ஏந்தி உறிஞ்சிக் கொண்டிருந்தார் அப்பா.

''கொஞ்சம் டம்ளரில் விட்டுத் தரட்டுமா?''

''கொடேன்.''

சத்தம் கேட்காமல் நாசூக்காகத் தலையில் அடித்துக் கொண்டாள் கலோசனா.

# மேளச்சத்தம் வீட்டை நெருங்குகிறது



அவள் வந்து கதவருகில் நின்றதை ரமா இன்னும் கவனிக்கவில்லை.

'இப்படி ருசியும் மணமுமாய் அப்பாவுக்குச் சமைத்துப் போடுவதுதான் தன் வாழ்க்கை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாளா இவள்? இவளது எதிர்காலத்தைப் பற்றி அப்பாதான் கவலைப்படவில்லை என்றால், இவள்கூட அதைப் பற்றி நினைப்பதாகத் தெரியவில்லையே!'

''அக்கா....!''



''ஆபீசுக்குக் கிளம்பி விட்டாயா, என்ன?'' என்று கேட்டுக் கொண்டே அவள் பக்கம் திரும்பினாள் ரமா.

''கல்யாணத்துக்குப் போக வேண்டாமா, ரமா? — நீயும்தான் கிளம்பேன். நான் அங்கிருந்தே ஆபீசுக்குப் போயிடறேன். நீ வீட்டுக்கு வந்துடு!''

''இல்லை கலோ. நான் வரலை. நீ போயிட்டு வா!''

ரமாவிடமிருந்து அவள் இந்தப் பதிலை எதிர்பார்த்ததுதான். கொஞ்ச காலமாகவே அவள் எந்தக் கல்யாண வீட்டுக்கும் வருவதில்லை. ஏன்? 'தன்னைவிட வயசில் மிகவும் சிறியவர்களுக்கெல்லாம் கல்யாணம் நடக்கிற போது தனக்கு மட்டும் இன்னும்...' — இப்படி ஏதாவது நினைப்பு அவள் மனத்தை வதைக்கிறதோ?

கலோசனாவின் கண்கள் அக்காவின் உருவத்தை ஒரு முறை அளந்தன.

நெடு நெடுவென்று நல்ல உயரம். சாட்டையாக நெளியும் பின்னல். தொட்டுத் தொட்டு அழகு பார்த்துச் செதுக்கியதைப் போன்ற மூக்கும் விழிகளும்! நல்ல சிவப்பில்லை என்றாலும் அவளது மாந்தளிர் நிறமே, அம்பாளைப் போல் அவளுக்கு அலாதியான சோபையைக் கொடுத்திருந்தது.

அவளைப் பார்த்தால் 'இருபத்தெட்டு வயது' என்று யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்.

பம்பரமாக வீட்டுக் காரியங்களை நிர்வகித்துக்கொண்டு, அந்தக் குடும்பத்தின் தலைவியாக அவள் வளைய வந்து கொண்டிருந்தாளே தவிர, தன்னைப் பற்றி ஏதும் கவலைப்பட்டதாகவே தோன்றவில்லை.

கலோசனா மௌனமாக அங்கிருந்து வெளியேறினாள்.

முகூர்த்த வேளை முடிந்தபிறகுதான் கலோசனா கல்யாண வீடு போய்ச் சேர்ந்தாள்.

பூரிப்பும் பொலிவுமாய் மாப்பிள்ளையின் அருகே நிற்கும் பாமாவின் கையைப் பிடித்துக் குலுக்கி, ''கன்கிராட்ஸ்' சொன்னாள் கலோ.

''ரமா வரலையா கலோ?'' என்று கேட்டாள் அவள்.

# பீஷ்மன்

''வருவாள்...!'' என்று சொல்லி வைத்தாள். வேறு என்ன சொல்வது?

''இப்பத்தான் வரயா? ரொம்ப நன்னாயிருக்குடீ...!'' என்று சொல்லிக்கொண்டே அவள் கையில் ஒரு டம்ளரில் சர்பத்தைக் கொடுத்தாள் பாமாவின் அக்கா ராஜி.

''ஆபீசுக்குப் போகணுமா, என்ன?''

''போகணும் ராஜி.''

''சாப்பாடு எப்பவோ தயார். இலை போடப் போறா! சாப்பிட்டுப் போயிடலாம் இப்பவே. என்ன....?''

புதுப் புடவை மொர மொரக்க, தன்னைச் சுற்றிலும் மல்லிகை மணத்தைப் படரவிட்டு கல்யாணக் கூடத்தில் ஓடியாடிக் கொண்டிருந்த ராஜியை ஏக்கத்துடன் கவனித்தாள் கலோ.

ரமாவுக்குக் கல்யாணம் என்றால், அவளும் இப்படித்தான் இந்த ராஜியைப் போல் உற்சாகமாக ஓடியாடி வேலை செய்வாள்.

அந்த நாள் என்று வரப் போகிறதோ?

சாப்பிடும்போது அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மாமி அவளைப் பார்த்துக் கேட்

டாள்: ''உங்க ரமாவுக்கு எப்படி கல்யாணம்? அப்பா ஏதாவது வரன் பார்த்திருக்காரா?''

''இன்னும் ஒண்ணும் இல்லே மாமி!''

''ஊருக்கெல்லாம் பொருத்தம் பார்த்துச் சொல்றார் உங்க அப்பா. பொண்ணுக்குப் பொருத்தமான ஜாதகம் அவருக்குக் கிடைக்கலே, பாரேன்!''

அந்த அம்மாள் சொல்வதில் அர்த்தமில்லே என்று தோன்றியது கலோசனாவுக்கு.

அவளுக்குத் தெரிந்து அப்பா ரமாவின் ஜாதகத்தை எடுத்துப் பார்த்ததே இல்லேயே!

கொஞ்ச நாட்களுக்கு முன்னால் நடந்த சம்பவம் அவள் நினைவுக்கு வந்தது.

யாரோ ஒருவர். பார்த்தால் அவர் பரம ஏழையாகத் தோன்றியது.

தம் பெண்ணின் ஜாதகத்தைக் கொணர்ந்து அப்பாவிடம் கொடுத்து, ''இவளுக்கு எப்போ கல்யாணம் ஆகும்னு பார்த்துச் சொல்லுங்கோ!'' என்றார்.

அப்பாவின் பக்கத்தில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்த கலோசனா, அவர் சொல்லப் போவதைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

அந்த ஜாதகத்தையே கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த அப்பா, திடீரென்று படு உற்சாகமாக ''இன்னும் இரண்டு மாசத்துக்குள்ளே கல்யாணம் நடந்தாகணுமே இந்தப் பொண்ணுக்கு!'' என்றார்.

வந்திருந்தவர் பரிதாபமாகச் சிரித்தார்.

''இப்பத்தானே இவள் ஜாதகத்தையே கையில் எடுத்திருக்கேன்! பணம் திரட்டி... வரன் பார்த்து... எங்கே ஸ்வாமி இரண்டு மாசத்திலே...?''

அப்பாவுக்குத் திடீரென்று கோபம் வந்து விட்டது.

''நான் சொல்லலே ஐயா! ஜாதகம் பேசறது! இன்னும் ரெண்டே மாசம்தான்! அதுக்குள்ளே இந்தப் பொண்ணுக்குக் கல்யாணம் நடந்தாகணும்...!''

'அது எப்படி நடக்க முடியும்' என்ற சந்தேகம் இருந்தாலும் 'அப்படி நடக்க வேண்டுமே' என்ற ஆசையுடன் பரம சந்தோஷத்துடன் அந்த மனிதர் அப்பாவிடம் விடை பெற்றுச் சென்றார்.

அவர் போன பிறகு கலோ அப்பாவிடம் கேட்டாள்:

''ரமாவுக்கு அந்த வேளை இன்னும் வரவே இல்லையா அப்பா?''

ஏதோ யோசனையில் இருந்தவர் அவளைத் திரும்பிப் பார்த்தார்.

''என்ன கேட்டாய்?''

அவருடைய குரல் சற்றுக் கடுமையாக இருந்ததை அவள் கவனித்தாள். இருந்தாலும், ''ரமாவுக்கு இன்னும் அந்த வேளை வரலையான்னு கேட்டேன்!'' என்றாள்.

''வரணும்.''

அவர் மேலே ஏதும் சொல்வார் என்று அவள் மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்தாள்.

ஆனால், அதற்கு மேல் ஒன்றும் பேசாமல் மௌனமாகி விட்டார் அவர்.

கலோவும் அத்துடன் பேச்சை நிறுத்திக் கொண்டு விட்டாள்.

அம்மா இறந்தபோது கலோசனாவுக்கு ஐந்து வயதுதான் இருக்கும். அன்று முதல் ரமாதான் அவளுக்கு அம்மா, அக்கா எல்லாமே. குடும்பத்தை நிர்வகிப்பதில் ஒரு பொறுப்பு வாய்ந்த தலைவியாக நடந்துகொள்ளும் ரமா, தங்கையிடம் பழகும்போது, ஒத்த வயதுத் தோழியாக மாறிவிடுவாள். அதனால்தானோ என்னவோ, ரமாவிடம் கலோசனாவுக்கு அப்படி ஓர் ஈடுபாடு.

வீட்டுப் பொறுப்பு தலையில் விழுந்துவிட்ட காரணத்தால், எட்டு வகுப்புடனேயே ரமா, படிப்பை முடித்துக் கொள்ளும்படி ஆயிற்று.

எஸ். எஸ். எல். ஸி. படித்து முடித்த கலோசனா, உள்ளூரிலேயே ஒரு மருந்துக் கம்பெனியில் வேலைக்குப் போய் வருகிறாள். அப்பாவின் வருமானம், அவள் கொண்டு வரும் இருநூறு ரூபாய் — இவை அந்தச் சின்னக் குடும்பத்துக்குப் போதும்தான். என்றாலும் ஒரு கல்யாணத்தை நடத்துவதற்குத் தேவையான பணத்துக்கு எங்கே போவது?

ஒருவேளை — அதனால்தான் அப்பா இப்படி மௌனமாக இருக்கிறாரோ?

அப்பா வாய் விட்டு இதைப் பற்றி ஏதாவது பேசினால்தான் என்ன?

வேலைக்குப் போக ஆரம்பித்து ஒரு வருடம் தான் ஆகிறது. என்றாலும், அவளே கூட ஓர் இரண்டாயிரம் கடனாகப் புரட்டிவிட முடியும். நகை நட்டு ஒன்றும் வாங்க வேண்டியதில்லை. அம்மாவுடைய நகைகள் இருக்கின்றன.

அப்பா மனம் வைத்தால் தேவைப்படும் பணத்தைப் புரட்டி விட முடியாதா?

பின் ஏன் அவர் இப்படிச் சும்மா இருக்கிறார்?

---

அடுத்த இதழில்!...



**காந்தியக் கிராமம்**

ஆச்சரியம்! 1975ல் இப்படியும் ஒரு கிராமமா?

6 | 9

**எண்களுக்கும் காலம் வரும்:**

அப்படி வரும்போது என்னமாய் அவை நம்மைச் சிரிக்க வைக்கின்றன!

*சிறுகதை:*

**நூற்றைம்பது ரூபாய்**

ப. தமிழினியன்

ஆபீஸில் 'லஞ்ச் டைம்'.

தினமும் தான் கொண்டு வரும் டிபனைத் தன்னுடன் வேலை பார்க்கும் நளினியுடன் கலோசனா பகிர்ந்து கொள்வது வழக்கம்.

அந்தப் பெண் நளினி தினமும் மோர் சாதம்தான் கொண்டு வரும். அவள் அம்மா ஒரு வியாதிக்காரி. எனவே தானே சமையல் பண்ணி முடிந்து எல்லோருக்கும் போட்டு விட்டு, தனக்குக் கொஞ்சம் மோர் சாதம் கலந்து கையில் எடுத்துக் கொண்டு வந்து விடுவாள் அவள்.

கலோவுக்கு ரமா தினமும் ஏதாவது டிபன் பண்ணிக் கொடுத்து அனுப்பாமல் இருக்க மாட்டாள்.

''உன் பாடு பரவாயில்லை கலோ. உங்க அக்கா—தினம் உனக்கு ஏதாவது டிபன் பண்ணிக் கொடுத்திடறா!'' என்று கூறுவாள் அவள்.

அன்று கல்யாண வீட்டுக்குப் போய் வந்ததினாலே கையில் டிபன் ஏதும் கொண்டு வரவில்லை கலோ. நளினியையும் அழைத்துக் கொண்டு காண்டீனுக்குப் போகலாம் என்று நினைத்துக் கொண்டு நளினியிடம் வந்தவளுக்கு ஓர் அதிசயம் காத்திருந்தது.

தன் டிபன் டப்பாவைத் திறந்து அதிலிருந்து புளியோதரையை எடுத்து டப்பா மூடியில் வைத்துச் கலோவிடம் நீட்டினாள் நளினி.

''என்னடி விசேஷம்? நீயா பண்ணினாய்?'' என்று கேட்டுக் கொண்டே அதில் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக் கொண்டாள். ''ரொம்ப நன்னாயிருக்கேடீ!'' என்றாள்.

''எங்க சித்தப்பாவும் அவர் பொண்ணும் ஊரிலிருந்து வந்திருக்கா, கலோ. சித்தப்பா பெண் ஞானாதான் இன்னிக்குச் சமையல்! புளியோதரை எப்படி இருக்கு?''

''ஏ ஒன்!'' என்று சர்டிபிகேட் கொடுத்தாள் கலோ.

''ஞானாவுக்கு முப்பது வயசாகிறதுடீ கலோ. இன்னும் கல்யாணம் ஆகலே. சித்தப்பா பாவம் ரொம்ப ஏழை. இந்த வருஷம் எப்படியும் கடன் கிடன் வாங்கி அவளுக்குக் கல்யாணம் பண்ணிடணும்னு பார்க்கிறார்.''

கலோசனா உடனே ரமாவை நினைத்துக் கொண்டாள்.

''ஒரு காரியம் செய்யேன் கலோ. உங்க அப்பாவிடம் சொல்லி ஞானாவுக்கு ஒரு வரன் பார்க்கச் சொல்லேன்!''

கலோவுக்கு ஏனோ சிரிப்புத்தான் வந்தது. இருந்தாலும், ''அவள் ஜாதகத்தை வாங்கிக் கொடு. அப்பாவிடம் சொல்கிறேன்'' என்றுதான் அவளுக்குப் பதில் சொன்னாள்.

''வாங்கித் தரவாவது? என்கிட்டேயே இருக்குடீ! தரேன். நீதான் உங்கப்பாவிடம் சொல்லி அவளுக்கு ஒரு வழி பண்ணணும்!''

குதிராக, தன் வீட்டில் ஒரு பெண் வளர்ந்து நிற்கிறதைப் பற்றி ஒருசிறிதும் கவலைப்படாமல் இருக்கும் இந்த அப்பா, இப்படி ஊரில் எத்தனை பெண்களின் கல்யாணத்தை நடத்தி வைத்திருக்கிறார்!

தன் இருக்கைக்குப் போனதும் ஜாதகத்தை எடுத்துக் கொணர்ந்து கொடுத்து விட்டுப் போனாள் நளினி.

ஆங்கில நடிகர் அந்தோனி க்வின் ''தி மேகஸ்'' என்ற படத்தில் நடிக்கத் தமது தலைமுடியை எடுக்க வேண்டியிருந்தது. அதற்கு அவர் மறுத்தபோது, அதன் தயாரிப்பாளர் அவரது தலைமுடியை இன்ஷ்யூர் செய்து, பழையபடி அழகு முடி வளராவிட்டால் ஆனால் இருபது லட்சம் டாலர்கள் தருவதாகவும் எழுதிக் கொடுத்தார்.

ஆதாரம்: ''ஸ்டார் அண்ட் ஸ்டைல்''

தகவல்: சுந்தர்



''மறந்துவிடாதே கலோ...!''

ஆபீஸ் விட்டு வரும்போது அப்பா வீட்டில்தான் இருந்தார். திண்ணையை அடுத்த நடையில் பஞ்சாங்கத்தைப் புரட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தார் அவர்.

உள்ளே நுழைந்ததுமே நளினி கொடுத்திருந்த ஜாதகத்தை எடுத்து அப்பாவிடம் கொடுத்தாள் அவள்.

''இவளுக்கு எப்போ கல்யாணம் ஆகும்னு பார்த்துச் சொல்லுங்கோ அப்பா!''

''யாருடைய ஜாதகம் இது, கலோ!''

''எனக்கு ரொம்ப வேண்டிய பெண் அப்பா இது!'' என்றவள், ''இருங்கோ! இதோ வந்து விட்டேன்!'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே போனாள்.

ரமா கிணற்றடியில் கொல்லைப்புறத்தில் பற்றுத் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

கூடத்தில் நின்று அப்பாவைத் திரும்பிப் பார்த்துவிட்டுத் தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள் கலோசனா. அப்புறம் அங்கிருந்த அலமாரியில் எதையோ தேடினாள்.

அவள் திரும்பி வந்தபோது அப்பா அவள் கொடுத்த ஜாதகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''இந்த இரண்டு ஜாதகமும் பொருந்தியிருக்கா பாருங்கோ அப்பா!''

கலோசனா கொடுத்த மற்றொரு ஜாதகத்தை வாங்கிப் பிரித்தார்.

''என்ன கலோ இது? என் ஜாதகம்னா இது...?'' என்று கேட்டபோது அவள் ரொம்பவும் அமைதியாகப் பதில் சொன்னாள்:

''ரமா மாதிரி இந்தப் பெண் ரொம்ப நன்னா சமையல் செய்வாள் அப்பா! குடும்பப் பாங்கான பெண். உங்களுக்கு வாய்க்குச் சுவையாகச் சமைச்சுப் போடுவாள். இந்தப் பெண்ணுக்கு இப்படி ஒரு வழி பிறந்தால் ரமாவுக்கும் ஒரு வழி பிறக்கலாம் இல்லையா?''

மிகவும் நிதானத்துடன் தன் எதிரே நின்று பேசிக் கொண்டிருக்கும் மகளைப் பார்த்து அவர் ஆத்திரப்படவில்லை.

''வாஸ்தவம்தான் கலோ. என்னுடைய அசிரத்தை உன்னை இப்படியெல்லாம் எண்ண வைச்சுட்டது...!'' என்று சொல்லிக் கொண்டே அந்த இரண்டு ஜாதகங்களையும் மடித்து அவள் கையில் கொடுத்தார்.

''ரமாவுக்கு, இந்தப் பெண்ணுக்கு இரண்டு பேருக்குமே நான் வரன் பார்க்கிறேன் அம்மா!''

அப்பாவின் கண்கள் கலங்கி — இப்போதுதான் பார்க்கிறாள் கலோ. ஆயினும் அந்தக் கலங்கிய கண்களில் அவளுக்கு ஒரு புதிய ஒளி தெரிந்தது.

(மாலை வேளை.
நித்யா வீணையைத் துடைத்து உறை போட்டுத் தயாராக எடுத்து வைத்துக் கொள்கிறாள். வாசலில் டாக்ஸி வந்து நிற்கும் சத்தம் கேட்கிறது. அவள் கணவன் வாசு, குழந்தை முரளியுடன் இறங்கி உள்ளே வருகிறான்.)

வாசு: டாக்ஸி வந்தாயிற்று நித்யா. புறப்படு. தயார்தானே ?

நித்யா: அப்படியானால் நான் கிளம்பட்டுமா ? நீங்கள் வரப் போவதில்லையா ?

வாசு: நான் வந்து என்ன செய்யப் போகிறேன் நித்யா ? எனக்கும் சங்கீதத்துக்கும் காத தூரம். அதுதான் முன்னால் இரண்டு தடவை வந்து பொறுமையாக உட்கார்ந்திருந்தேனே ?

நித்யா (சிரித்தபடி): பொறுமையை இரண்டு தடவையும் சோதித்துவிட்டேனாக்கும் ?

வாசு: அதற்கில்லை நித்யா. இதோ பார், ஆபீஸ் டிபார்ட்மெண்ட் பரீட்சைக்காகப் படிக்கக் கொண்டுவந்த புத்தகங்கள். கொஞ்சமாவது படிக்க வேண்டாமா? கச்சேரி முடிகிற சமயத்தில் வந்து அழைத்துக் கொண்டு போகிறேன். போதாது (வீணையை எடுத்து வந்து டாக்ஸியில் வைக்கிறான்.) நினைவு வைத்துக் கொள் நித்யா. இதுதான் உன்னுடைய கடைசி பப்ளிக் பர்ஃபாமன்ஸாக இருக்க வேண்டும். முகஸ்துதி, கைதட்டல் இதிலெல்லாம் மயங்கி விடாதே. சரிதானே ?

நித்யா (வருத்தத்தோடு): மறக்க மாட்டேன் !.

(நித்யாவும் முரளியும் டாக்ஸியில் ஏறிக் கொள்ள, டாக்ஸி விரைகிறது.)

## 2

(காலை வேளை.
சமையலில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறாள் நித்யா. ஆபீசுக்குப் புறப்படத் தயாராக, வாசு சட்டைக்கு இஸ்திரி போட்டுக் கொண்டிருக்கிறான்.)

வாசு (தூக்கிய குரலில்): நித்யா! சாப்பிட உட்காரலாமா ? நேரம் ஆகிறது. பார் !

நித்யா: இதோ தட்டு வைத்துவிடுகிறேன். ஐந்தே நிமிஷம்....

(சமையலறைக்குள் போகிறாள். வாசு அயர்ன் செய்த சட்டையை எடுத்து 'ஹாங்க'ரில் மாட்டுகிறான். யாரோ, 'காலிங் பெல்'லை அழுத்துகிறார்கள்.)

வாசு: யாரது?... இதோ வருகிறேன்.

(கதவைத் திறக்கிறான். பள்ளிக்கூட மாணவிகள் மாதிரி இரண்டு பெண்கள் நின்று கொண்டிருக்கிறார்கள்.)

ஒருத்தி: இதுதானே வீணை வாசிக்கிற நித்யா மாமி வீடு ?

வாசு: ஆமாம்!. என்ன வேண்டும் உங்களுக்கு? உள்ளே வந்து உட்காருங்கள். கூப்பிடுகிறேன். (திரும்பி) நித்யா..



நித்யா (வந்து கொண்டே): எதற்குக் கூப்பிட்டீர்கள்? (மாணவிகளைப் பார்த்து விட்டு) என்னையா பார்க்க வந்தீர்கள்?

மாணவிகள்: ஆமாம்.

வாசு: எனக்கு நேரமாகிறதே நித்யா.... தட்டு வைத்துவிட்டாயா?

நித்யா (மாணவிகளை நோக்கி): சற்று இப்படி உட்காருகிறீர்களா? அவசரமாக எங்கும் போக வேண்டாமே?

மாணவிகள்: அவசரம் ஒன்றும் இல்லை, மாமி....

(வாசு உள்ளே போகிறான், நித்யா பின் தொடர. அவனுக்குப் பரிமாறி விட்டு, அவன் சாப்பிட்டு எழுந்த பின் வெளியே வருகிறாள்.)

நித்யா: ரொம்பவும் காக்க வைத்துவிட்டேன். (புன்னகையுடன்) எதற்கு என்னைப் பார்க்க வேண்டும் என்றீர்கள்?

(உள்ளே யிருந்து வாசுவின் குரல் வருகிறது.)

வாசு: நித்யா, குடிக்க ஒரு தம்ளர் தண்ணீர் கேட்டேனே?

நித்யா (மாணவிகளிடம்): மன்னியுங்கள். இதோ வருகிறேன்.

(உள்ளே போய்த் தம்ளரில் தண்ணீர் எடுத்து வந்து வாசுவிடம் கொடுக்கிறாள்.)

நித்யா (அவர்களை நோக்கி வருகிறாள்): என்ன வேண்டும், சொல்லுங்கள்!

ஒருத்தி: நாங்கள் பக்கத்துத் தெருவில் தான் இருக்கிறோம். நேற்று உங்கள் வீணைக் கச்சேரியைக் கேட்டோம். ரொம்பப் பிரமாதம். நீங்கள் டியூஷன் சொல்லித் தருவீர்களா என்று கேட்கத்தான் வந்தோம்.

(மறுபடியும் உள்ளே யிருந்து வாசுவின் குரல் வருகிறது.)

நித்யா (பட்டனை வைத்து நூலைக் கோத்த படியே): ஊஹூம்.... அசைக்காதீர்கள்.... அப்புறம் ஊசி உடம்பில் குத்திவிடப் போகிறது!

வாசு: நல்லவேளை. நீ இப்போது குஷி மூடில் இருக்கிறாய். என்னிடம் கோபித்துக் கொண்டிருந்தால் ஊசியால் ஒரு குத்துக் குத்திவிட்டு சாரி என்றிருப்பாய்!

நித்யா (பொய்க் கோபத்துடன்): பார்த்தீர்களா... அசைக்காதீர்கள் என்றேனே! இரண்டு நிமிஷத்தில் தைத்து ஊசி நூலை எடுத்து வைக்க வேண்டியவளை இன்னும் விடவில்லை நீங்கள். அவர்கள் வேறு காத்துக் கொண்டிருக்கிறார்கள்....

வாசு (உண்மையாகவே சற்றுச் சினம் கொண்டு): யாரோ உனக்காகக் காத்திருக்கிறார்கள் என்பதற்காக நான் பட்டன் இல்லாத சட்டை போட்டுக் கொள்ள வேண்டுமாக்கும்? அப்புறம் உனக்குத் தோய்த்துப் போட நேரம் இல்லையென்றால் சட்டையே போடாமல் போகச் சொல்லுவாய் போல் இருக்கிறது!

நித்யா (திடுக்கிட்டு): ஐயையோ... நான் அப்படியா சொன்னேன்?

(நூலை விரல் நுனியில் வைத்து மடித்து நறுக்கி எடுக்கிறாள்.)

வாசு: போ. போ...உன் விசிறிகள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

நித்யா (விழியோரங்களில் நீர் துளிக்க): நிஜமாகவே கோபமா?

வாசு: சீ, அசடு.... கண்ணைத் துடைத்துக் கொள்.... எனக்கென்ன கோபம் உன்னிடம்?

(நித்யா கண்களைத் துடைத்துக் கொண்டு ஹாலைக் கடந்து மாணவிகளிடம் வருகிறாள்.)

# நல்லதோர் வீணை...

வாசு: நித்யா.... பேசி முடித்தாயிற்று? ஒரு நிமிஷம் வா இங்கே.....

(நித்யா அவர்களிடம் மன்னிப்புக்கோரும் பாவனையில் பார்த்துவிட்டு உள்ளே விரைகிறாள்.)

வாசு: இதோ பார். சட்டையில் சரியாக மேலே பட்டன் பிய்த்துக் கொண்டுவிட்டது. ஊசி நூல் எங்கே பார்! எடு...

நித்யா (மெல்ல): இப்போதே தைக்க வேண்டுமா?

வாசு: பின்னே? ரௌடி மாதிரி பித்தானே போடாமல் மாரைத் திறந்து போட்டுக் கொண்டு ஆபீசுக்குப் போகச் சொல்லுகிறாயா?

நித்யா (சிரித்தபடி): இத்தனை அழகான ரௌடிகூட இருக்க முடியுமா என்ன! (ஊசி நூலை எடுக்கிறாள்.)

வாசு: வாட்! நான் அழகாக இருக்கிறேன் என்று புகழ்கிறாயா. இல்லை ரௌடிகள் அழகாக இருக்கமாட்டார்கள் என்கிறாயா?

நித்யா: டியூஷனா? டியூஷன் சொல்லித் தரும்படி எனக்கு அதிகமாக ஒன்றுமே தெரியாதே......

மாணவி: உங்களுக்குத் தெரிந்தவரையில் சொல்லித் தாருங்களேன். அருகிலேயே இருக்கிறோம்..... காலையிலோ மாலையிலோ எப்போது சௌகரியமோ அப்போது வந்து கற்றுக் கொடுங்களேன்!

நித்யா (தயங்கியபடியே): டியூஷன் சொல்லித் தர எனக்கு நேரம் இருக்காது போலிருக்கிறதே! அதுவுமல்லாமல் அவரையும் கேட்க வேண்டும்.

மாணவி: ஒரு மணி நேரம் போதும் மாமி. அவரை வேண்டுமானால் இப்போதே கேட்டுவிடுங்களேன்.....

நித்யா: இப்போதேயா? அவர் ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறார்....

வாசு (வந்து கொண்டே): சாயங்காலம் கொஞ்சம் நேரம் ஆகும் நித்யா. வரட்டுமா?

அமெரிக்க மாநிலமான டெக்ஸாஸில் பணக்காரர்கள் ரொம்ப அதிகம். அதோடு தற்பெருமை அதிகம். இவர்களைப் பற்றிய ஏராளமான ஜோக்குகளில் மாதிரிக்குச் சில:



ஒரு டெக்ஸாஸ் பணக்காரரின் ஆயா சொன்னாள்: "இனி மேல் இந்தக் குழந்தையைப் பிராங்கைக்குக் கூட்டிக் கொண்டு போகவே மாட்டேன்."

"ஏன்?" என்றாள் பணக்கார அம்மாள்.

"அங்கே எதைக் கண்டாலும் வாங்கித் தருமாறு பிடிவாதம் பிடிக்கிறான்."

" உடனே வாங்கிக் கொடுக்க வேண்டியதுதானே?"

"ஈஃபில் டவரைக் கூடவா ?"



"உன் மகன் ஏதோ பரீட்சையில் பெயில் ஆகி விட்டான் என்று சொன்னாயே, அவனை என்ன செய்தாய் ?"

"நன்றாக அவனைத் தண்டித்துவிட்டேன்."

"எப்படி ?"

"அவனுடைய 'இம்பாலா' காரிலிருந்து 'ஏர் கண்டிஷன'ரை நீக்கிவிட்டேன்!"



நியூயார்க்காரர் ஒருவருக்கும் டெக்ஸாஸ்காரர் ஒருவருக்கும் எந்த மாநிலத்தில் மிக உயரமான கட்டடம் உள்ளது என்பது பற்றி விவாதம்.... நியூயார்க்காரர் சொன்னார்: "சொன்னால் நம்பமாட்டீர்கள். எங்கள் ஊரில் உள்ள 'எம்பயர் ஸ்டேட் பில்டிங்'கிலிருந்து ஒரு குழந்தை விழுந்தது. கீழே தரையை எட்டும் போது வயது வந்த மனிதனாக மாறிவிட்டிருந்தது !"

டெக்ஸாஸ் பேர்வழியின் பதில்: "இதென்னப்பா அதிசயம் ? எங்கள் ஊர் உயரமான கட்டடம் ஒன்றிலிருந்து ஒரு குரங்கு விழுந்தது. அது கீழே விழும் போது மனிதனாகிவிட்டிருந்தது!"



டெக்ஸாஸ் பகுதியில் புதிதாகக் குடியேறிய ஓர் அயல் ஊர்க்காரர் நூறு டாலரை எடுத்துக் கொண்டு போய் பக்கத்து வீட்டில் "சில்லறை இருக்குமா?" என்று கேட்டார்.

"இங்கே நூறு டாலரைத்தான் நாங்கள் சில்லறை என்று கருதுவோம்" என்று பதில் வந்தது !

நித்யா (தயங்கிக் கொண்டே): என்ன?... இவர்கிட் வீணை டியூஷன் சொல்லித் தர முடியுமா என்று கேட்கிறார்கள்.....

வாசு : எனக்கு இந்த ட்யூஷன் விவகாரம் எல்லாம் பிடிக்காது. இப்போதைக்கு அவர்களை அனுப்பி வை. நான் வரட்டுமா ?

(போகிறான்)

நித்யா: சரி, அப்படியே செய்கிறேன். (மாணவிகளிடம் திரும்பி) நான் சொன்னேனில்லையா... அவர் அவசரமாக ஆபீசுக்குக் கிளம்பிக் கொண்டிருக்கிறார்.

மாணவி: நீங்கள் ரொம்பவும் பயப்படுகிறீர்கள் போலிருக்கிறது.

நித்யா (புன்னகையுடன்): நீங்கள் இன்னும் கல்யாணமாகாதவர்கள் இல்லையா ? கணவரின் கோபம் என்றால் என்ன என்று தெரியாது உங்களுக்கு.... நான் அவரைக் கேட்காமல் எதும் ஒத்துக் கொள்வதில்லை....

மாணவி: சரி மாமி! யோசனை பண்ணி, (சிரித்து) பர்மிஷன் வாங்கி மெல்லச் சொல்லுங்கள். வரட்டுமா ?

நித்யா: ஆகா.. போய் வாருங்கள்.

### 3

(மறு வாரம் மாலை வேளை. விளக்கு ஏற்றிவிட்டு, முரளிக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க உட்காருகிறாள் நித்யா.





இரண்டு டெக்ஸாஸ் மேதைகள் தங்களுடைய மூன்று வயதுக் குழந்தைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"என் குழந்தை என்ன அறிவாளி தெரியுமா? இந்த வயதிலேயே ஐன்ஸ்டீனின் தியரி ஆஃப் ரிலேடிவிடி புரிந்துவிட்டது என்கிறான்!"

மற்றவர் சொன்னார்: "இதுவாவது பரவாயில்லையே! என் குழந்தை அந்தத் தியரியைத் தவறு என்கிறான்!"

இரண்டு டெக்ஸாஸ் கோமகவரர்களின் குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. ஒரு குழந்தை தன் கையை மூடிக்கொண்டு கேட்டது: "என் கைக்குள் என்ன இருக்கிறது?"

"ஏரோப்ளேன்."

"இதை நான் ஒப்புக் கொள்ள முடியாது. நீ முதலிலேயே பார்த்துவிட்டாய்" என்றது முதல் குழந்தை!

# டெக்ஸாஸ் டேப்ஸ்

தொகுப்பு: கே.வி.முரளி



டாக்ஸிக்காரர் டெக்ஸாஸ்காரரை ஆச்சரியம் அடையச் செய்ய எண்ணி அவரை நயாக்ரா நீர் வீழ்ச்சியைக் காண அழைத்துச் சென்றார்.

டெக்ஸாஸ்காரர் அதைப் பார்த்துவிட்டு அலட்சியமாகச் சொன்னார்: "எங்கள் ஊரில் இந்த மாதிரி 'லீக்'கைச் சரி செய்ய நிறையக் குழாய் ரிப்பேர்க் காரர்கள் இருக்கிறார்கள்!"

முரளி புத்தகங்களுடன் அவளருகே உட்கார்ந்திருக்கிறான். வாசு ஆபீஸ் ஃபைல்களில் மூழ்கி விடுகிறான்.

வாசலிலிருந்து 'ஸார்......ஸார்' என்று அழைப்புக் குரல் கேட்கிறது.)

*நித்யா:* முரளி, யார் கூப்பிடுவது பார்.

(முரளி போக எழுந்திருக்கிறான். அதற்குள்—)

*வாசு:* அவன் படிப்பைக் கவனிக்கட்டும். நான் பார்க்கிறேன்.

(போய்க் கதவைத் திறக்கிறான். குங்குமப் பொட்டும், கையில் பிளாஸ்டிக் பையுமாக ஒரு பெரியவர் நிற்கிறார்.)

*வந்தவர்:* இங்கே வீணை வித்வான்.....

*வாசு (பெரிதாகச் சிரித்துவிட்டு):* வீணை வித்வானா! நித்யா, ஏ நித்யா... இப்படி வா ஒரு நிமிஷம்.

*வாசு:* நீ வீணை வித்வானா? உன்னைப் பார்க்க வேண்டுமாம் இவருக்கு! (அவரிடம் திரும்பி) ஆமா சார். இவள் என் மனைவி. நித்யா வாசுதேவன். வீணை வாசிப்பாள். (கேலியாக) இதோடு மூன்று கச்சேரிகள் வேறு செய்திருக்கிறாள்.

*வந்தவர்:* மூன்று கச்சேரிகளும் மணியான கச்சேரிகள் அல்லவா!

(புகழ்ச்சியில் வெட்கி, நித்யா தலையைக் குனிந்து கொள்கிறாள்.)



''உங்களிடமிருந்து பாக்கிப் பணம் வாங்கிக் கொண்டுதான் கடைக்கு வர வேண்டும் என்று எஜமான் சொல்லியிருக்கிறார்.''

''அப்படியா? வேறு நல்ல வேலையாத் தேடிக் கொள்ளேன்.'' - விஜயம்

வாசு: நீங்கள் எதற்கு வந்திருக்கிறீர்கள் என்று சீக்கிரம் சொன்னால் பரவாயில்லை. என் பையனின் படிப்பு அங்கே பாதியில் நிற்கிறது. பாருங்கோ, அவனுக்கும் நித்யாதான் டியூஷன்.....

வந்தவர்: ஐ'ம் சாரி. நான் இங்கே இந்தத் தெருக் கோடியில் இருக்கிற கோயிலிலிருந்து வருகிறேன். அங்கே உற்சவத்தன்றைக்கு உங்கள் மனைவி வீணைக் கச்சேரி செய்ய முடியுமா என்று கேட்கத்தான் வந்தேன்.....

வாசு: யாராலும் ரியல் வீணை வித்வான் இருந்தால் அவர்களுக்கு சான்ஸ் கொடுங்கள், சார். இப்படி வீட்டு வேலை இருக்கிற குடும்பப் பெண்களைக் கச்சேரி செய்ய அழைத்து அவர்களை இதற்கும் இல்லை, அதற்கும் இல்லை என்று ஆக்கிவிடாதீர்கள்.

நித்யா (திடுக்கிட்டு): அவர் ஏதோ தெய்வ கைங்கரியமாகக் கேட்க வந்திருக்கிறார்..... நீங்கள் இப்படிக் கோபிக்கிறீர்களே....

வந்தவர்: கடவுள் சந்நிதியில் வாசிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா ?

வாசு: ஹூங், பெரிய கைங்கரியம்! அவரவர் வீடே அவரவர்களுக்குக் கோயிலாக இருக்க வேண்டும் ஸ்வாமி. அதற்கு மேலே என்ன வேண்டும் வாழ்க்கையில் ? அது இல்லையானால் அமைதி, நிம்மதி எல்லாம் அவுட் ! கணவன் ஒரு மூலையைப் பார்த்துக் கொண்டிருப்பான், மனைவி ஒரு மூலையைப் பார்த்துக் கொண்டிருப்பாள். குழந்தைகள் பாடு அதோகதி! கவனிப்பாரற்று வாழ்க்கையே குட்டிச்சுவராகிவிடும். என்ன, நான் சொல்வது சரியில்லை நித்யா ?

நித்யா (அவன் சொல்லுவதை மறுக்க முடியாமல், மென்று விழுங்கி): அ...அ...ஆ...

வந்தவர்: வேண்டாமம்மா...நமஸ்காரம். போய் வருகிறேன்.

(வேகமாகத் திரும்பி நடக்கிறார்.)

வாசு: நான் சொன்னதில் ஏதேனும் தப்பு இருக்கிறதா நித்யா ? சொல். அதோ பார், முரளி அங்கே காத்துக் கொண்டிருக்கிறான், புத்தகத்தை வைத்துக் கொண்டு.

(நித்யா அவனை ஏறிட்டுப் பார்த்து விட்டு நகர்கிறாள். விழியோரங்களில் கண்ணீர் முட்டிக் கொண்டு நிற்கிறது.)

## 4

(இரவு.
படுக்கையைத் தட்டிப் போட்டு, முரளிக்கு ஒரு தம்ளரில் பால் கொண்டு வந்து கொடுக்கிறாள் நித்யா.)

வாசு: நித்யா !

நித்யா: இதோ இருக்கிறேன். ஏதாவது வேண்டுமா ?

வாசு (அவளையே இமைக்காமல் பார்த்துக் கொண்டு): நீ இப்போது நிற்கிறதைப் பார்த்தால் என்னிடம் சண்டை போட வந்திருக்கிற மாதிரி இருக்கிறது.

நித்யா (விரக்தியாகச் சிரித்து): நான் இருக்கிற லட்சணத்துக்குச் சண்டை வேறு போட வேண்டுமா என்ன? அதுவும் உங்களிடம்?

வாசு: ஏன், உனக்கு என்ன குறைச்சல்? அழகாக இருக்கிறாய். நன்றாகப் படித்திருக்கிறாய். நன்றாக வீணை வாசிக்கிறாய்.....

நித்யா: ரொம்ப சரி. எதற்குக் கூப்பிட்டீர்கள்? வேலை நிறைய இருக்கிறது. சமையல் அறையைக் கழுவிவிட வேண்டும்....

வாசு: அவ்வளவுதானே ? இல்லை, வீணையை வைத்துக் கொண்டு டொய்ங் டொய்ங் என்று தட்டப் போகிறாயோ என்று பார்த்தேன்.

நித்யா: உங்களுக்கு என்னுடைய வீணை இசை நாராசமாக இருக்கும் பட்சத்தில் அதை ஏன் இனி நான் வாசிக்கப் போகிறேன் ! உங்கள் அம்மா வைத்துவிட்டுப் போன வீணை என்றீர்கள்.... அதைப் பார்க்கும் போதும் அதை நான் வாசிக்கும்போதும் உங்களுக்கு அம்மாவின் நினைவு வராதா ?

வாசு (விரக்தியும் வெறுப்புமாக): அம்மாவின் நினைவா ! அது வராமல் இருக்க அல்லவா நான் முயன்று கொண்டிருக்கிறேன்... சரி.... சரி... போ. உனக்கு வேலை இருக்கிறதென்றாயே ? அதைக் கவனி. வீட்டு வேலை தான் முக்கியம்.....

(நித்யா போகிறாள். அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, படித்துக் கொண்டிருந்த புத்தகத்தைத் தூக்கிப் போட்டு விட்டு, விளக்கை அணைக்கிறான் வாசு.)

## 5

(மறு நாள் மாலை நேரம்.
வாசு இன்னும் ஆபீஸிலிருந்து திரும்பவில்லை. வாசுவின் பெட்டியைக் குடைந்து எதையோ தேடிக் கொண்டிருந்த முரளி, ஒரு பழைய கடிதத்தை எடுத்துக்கொண்டு நித்யாவிடம் ஓடி வருகிறான்.)

முரளி: அம்மா...அம்மா....இதைப் பார்.

நித்யா: என்னடா, என்ன வந்தது உனக்கு? எதற்கு இரைகிறாய் இப்படி ?

முரளி: நாளை ஸ்கூல் ஃபங்ஷனுக்கு ஒரு சிவப்பு டை கிடைக்குமா என்று அப்பாவின் பெட்டியைக் குடைந்தேனா, இந்தக் கடிதம் கிடைத்தது. இதை மட்டும் அப்பா ஏன் இப்படி ரொம்பவும் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார், அதுவும் அந்தச் சின்னச் சந்தனப் பெட்டியில் ?

நித்யா: அதை ஏன் நீ எடுக்க வேண்டும் ? யாருக்கு எழுதினது பார்!

முரளி: நீயே பார். பிறத்தியார் கடிதத்தை நான் படிப்பதில்லை... அப்பாடா ! என்ன வாசனை !

# கட்டமைக்கத் தாய்ப் பாலின் வரமிருக்கு,

## கால்ஷியம்- ஸாண்டோஸ் உரமிருக்கு!



பிறந்த குழந்தைக்குப் போஷாக்கின் ஊற்று, தாயன்றி வேறில்லை. குழந்தையின் பற்களும் எலும்பும் வளரத் துணையான ஊட்டச் சத்து கால்ஷியம் அன்றி வேறில்லை.

அத்தியாவசியமான அளவில் கால்ஷியம் உங்கள் குழந்தைக்குக் கிடைத்திட, அன்றாடம் 3 தடவைகள் மென்றிடுங்கள் 3-4 வில்லைகள் கால்ஷியம்-ஸாண்டோஸ். இனிய ராஸ்ப்பெர்ரி-சுவையுள்ள கால்ஷியம்-ஸாண்டோஸ், வைட்டமின்கள் C; D, $B_{12}$ அடங்கியுள்ளது.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்—தூய கால்ஷியம் படைப்பதில் உலக முன்னோடிகள்.

பாலூட்டும் தாய்க்கு, பிறரை விட மும் மடங்கு கால்ஷியம் தேவை. கிடைக்கிறதா உங்களுக்கு?

**கால்ஷியம் ஸாண்டோஸ்®**




**தினமும் தேவை எவருக்கும்**

dCP/CS/8i Tam.

# For the first time in the world

# A fairness cream that works without bleaching

Never before in the world has there been a product that has been able to effect fairness without bleaching. Till now, trying to make the skin fairer has always been a chancy business. Using a bleach to lighten the skin is known to be harmful, particularly if used frequently, owing to its harsh characteristics.

**Fair & Lovely is a scientific breakthrough that works two ways**

**1. It has a vitamin that works from the inside**




The vitamin enters the skin as you apply the cream. You can feel it working as you smooth it in . . . gently reversing the spreading of skin-darkening. With regular application through a period of six weeks you will notice the difference. And so will others.

**2. It has sun screen agents to protect from outside**

Fair & Lovely protects the skin by filtering out those sun rays that cause skin darkening.

**Fair & Lovely a fairness cream . . . and more**

Use it as a vanishing cream under make-up, at least once a day, twice for best results. Regular use of Fair & Lovely will ensure that you keep your complexion as fair as you want it to be.

## *Fair & Lovely* – the gentle way to a fairer skin

A Quality product of Hindustan Lever

LINTAS.FALOV.6-140

நித்யா: கொடு இப்படி! (கடிதத்தை வாங்கிப் பார்க்கிறாள். மேலே வாசுவின் பழைய திருச்சி விலாசத்துக்கு எழுதப்பட்ட அந்தக் கடிதத்தை மெல்லப் பிரிக்கிறாள். பிறகு முணுமுணுப்பாகப் படிக்கிறாள்:)

''அன்புள்ள வாசுவுக்கு, அம்மா ஆசிகளுடன் எழுதியது. இதுதான் என்னுடைய கடைசிக் கடிதமாக இருக்கும். நிற்க. உன் தகப்பனாரின் சந்தேகக் கண்களுக்கு நான் மான அவமானத்துக்குப் பயப்படும் ஒரு குடும்பப் பெண்ணாகத் தெரியவில்லை போலிருக்கிறது. கச்சேரி முடிந்து வீணையுடன் வீடு திரும்புகிற ஒவ்வொரு நாளும் எனக்கு நரக வேதனைதான்.... டியூஷனுக்குப் போகிற வீடுகளிலிருந்து திரும்பி வந்ததும் என்ன பார்வை! உடம்பையே கூறு கூறாக ஊடுருவும் பார்வை. தினசரி சண்டை. போராட்டம். எனக்கு வாழ்க்கையே அலுத்துவிட்டது. என்னுடைய வீணையை நீ என் நினைவாகவே வைத்துக் கொண்டாலும், உனக்கு மனைவியாக வருகிறவள் அதை வாசிக்கத் தெரியாதவளாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொள். தெரிந்தாலும் தன்னையே அதில் இழந்துவிடுகிறவளாக இல்லாமலிருக்கப் பிரார்த்திக்கிறேன். அவள் வாழ்க்கையிலாவது நிம்மதி வேண்டாமா?.... நீ இங்கே வருகிறபோது என்னுடைய வீணை மட்டும்தான் இருக்கும்.—அன்புடன், அம்மா.'' (கடிதத்தை மடித்துவிட்டு) எனக்கு வீணை வாசிக்கத் தெரியும் என்று தெரிந்திருந்தும் இந்த மட்டும் என்னை அனுமதித்தாரே, நான் பாக்கியசாலிதான்!

முரளி: யாருக்கு அம்மா நமஸ்காரம் பண்ணுகிறாய்? அப்படி என்ன எழுதியிருக்கிறது இதில்?

நித்யா: ஒன்றுமில்லையடா கண்ணா! வாழ்க்கையில் எப்படி சந்தோஷமாக இருக்க வேண்டும் என்று யாரோ அப்பாவுக்கு எழுதியிருக்கிறார்கள்.... அது போகட்டும். இந்தக் கடிதத்தை நீ எங்கிருந்து எடுத்தாயோ அங்கேயே பத்திரமாகத் திருப்பி வைச்சுட்டு வந்துடு பார்க்கலாம்!

(விளக்கேற்றும் நேரம். வாசு ஆபீஸிலிருந்து திரும்பி வருகிறான். நித்யா காப்பியுடன் வரவேற்கிறாள்.)

வாசு: நித்யா, நான் யோசித்துப் பார்த்ததில் உன்னிடம் ரொம்ப கண்டிப்புடன் நடந்து கொண்டதாக உணர்கிறேன். டியூஷனுக்கு மாணவிகள் இங்கு வருவதானால் எனக்கு ஆட்சேபணை இல்லை....

நித்யா: நானும் முடிவு பண்ணிவிட்டேன். இனி நாள் தவறாமல் வீணை சாதகம் பண்ணப் போகிறேன். ஆனால் எனக்கு ரசிகர்கள் நீங்களும் முரளியும்தான். வேறு யார் முன்னிலையிலும் வாசிக்கப் போவதில்லை.

முரளி: அப்பாவுக்குத்தான் வீணையே பிடிக்காதேம்மா.

நித்யா: அதெல்லாம் சும்மா. நாலு நாட்கள் கேட்டால் அவரே வீணையை எடுத்து என் மடியில் வைப்பார் பார்!

(திரை)



# வட்டமேஜை



''பொன்னியின் புதல்வர்'' வாரா வாரம் ஒரு மாயாஜால உலகுக்குக் கொண்டு போய்விடுகிறது.

கண் என்னமோ பக்கங்களில் மேய்கிறது. ஆனால் நான் எங்கேயோ போய்விடுகிறேன், அது என்ன மாயம்?

பயாகிரஃபி என்று சுந்தா எழுதினாலும் அது கல்கியின் ஆடோபயாகிராஃபியாகவே ஆகிவிட்டது. பல இடங்களிலும் கல்கியையே பேசச் சொல்லி விடுகிறார்.

ஆனால் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் அடிப்படை எது என்று சுந்தா கண்டுபிடிப்பது எப்படி என்று யோசித்தால் வியப்புக்கு மேல் வியப்பாய் இருக்கிறது.

எங்கேயோ மு. வ. சொல்லியிருப்பதைச் சாட்சிக்குக் கொண்டு வருகிறார். இப்படியெல்லாம் வெவ்வேறு நூல்களின் பக்கங்களில் ஒளிந்து கொண்டிருக்கும் கருத்துக்களை எப்படி இனம் கண்டு கொள்ளுகிறார்?

ஒன்று தெரிகிறது. இதுவரையில் இவ்வளவு தூரம் உழைத்து ஒருவரும் விஷயத்தைச் சேகரித்து எழுதியது கிடையாது.

ஒரு நாவல் எல்லோரையும் படிக்கத் தூண்டுவதில் வியப்பில்லை. ஒரு தனி மனிதரைப் பற்றிய விவரங்களை வாரா வாரம் மிக ஆவலோடு படிக்க வைப்பது என்பது இலேசான காரியமல்ல.

எவ்விதமான சலிப்பும், சோர்வும் ஏற்படாமல், அதே சமயம் சுவை மிகுந்து கொண்டே போகிறது.

சுந்தா எழுதும் முறையானது யாரும் இதுவரை தமிழில் செய்து பார்க்கவில்லை. ஏன், பிற மொழிகளிலும் கூட இந்த முறை இருந்திருக்காது என்றே நினைக்கிறேன்.

தக்க இடத்தில் மேற்கோள்களாகக் கல்கியின் எழுத்தையே வைப்பதானது சுந்தா ஆராய்ந்து முடிவு கட்டியது மிகச் சரி என்று நிரூபித்து விடுகிறது. 'பலே, பலே' என்று கல்கியே வாசகரிடம் சுந்தாவைப் பற்றிச் சொல்லி விடுகிறார்!

தென்காசி
20—6—75 தீப. நடராஜன்

அஸ்ஸாம் மேதையின் கூற்றிலிருந்து உருவாக்கப்பட்ட புதுக் கணக்கு:

காங்கிரஸ் + இந்திரா = இந்தியா.
இந்திரா = இந்தியா.
∴ — காங்கிரஸ் = 0.

புதுடில்லி—49
23—6—75 இ. பா

'குயிலி ராஜேசுவரி' அவர்கள் எழுதிய 'அன்னையம்மா' என்ற கதையைப் படித்தேன். இதே கதை 1972-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் ரீடர்ஸ் டைஜஸ்ட் பத்திரிகையில் உண்மைச் சம்பவம் என்ற குறிப்புடன் வெளியாகியிருக்கிறது. சிறிய திருத்தங்களுடன் குயிலி கொடுத்திருக்கிறார்.

ஆலப்புழை
20-6-75 கௌரி ராமண்ணா




## 14

கணவன் மனைவியிடையே எத்தனை வயதானாலும் புதுமை மாறவேண்டிய அவசியம் இல்லை என்பதாகக் கபூர் குறிப்பிட்டதும் ராகேஷுக்குக் கிளியோபாத்ராவின் ஞாபகம் வந்தது.

''கிளியோபாத்ரா அப்படி இருந்திருப்பதாகத் தெரிகிறது. வயதாலோ அல்லது பழக்கத்தாலோ அவள் பழசாகி விடவில்லை என்று கூறுவதெல்லாம் ... ஒரு வகையில் பார்க்கப் போனால், இலட்சியப்படுத்தப்பட்ட காதல் என்றுதான் சொல்ல வேண்டும்'' என்றான் ராகேஷ்.

''எனக்கு ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.''

''என்ன?''

''நான் கல்லூரியில் படிக்கும் போது, கல்லூரி விழா ஒன்றுக்குத் தலைவரை அழைத்து வருவதற்காக ஒரு ஜட்ஜ் வீட்டுக்குப் போனேன். அவருக்கு ஐம்பத்தைந்து வயதிருக்கலாம். அவர் மனைவியையும் அழைத்து வரலாமா என்று கேட்டார். 'தாராளமாக அழைத்து வாருங்கள்' என்றேன். அந்த அம்மாளுக்கு ஐம்பது வயதிருக்கலாம். கல்வி அறிவு இல்லாமல் பழங்கால ஆசாரத்தில் ஊறிய தம் மனைவிக்கு அவர், சிக்கலான பல பிரச்னைகளைப் பற்றி மிகவும் தெளிவாக, குழந்தைக்குக் கூறுவதுபோல் சொல்லிக் கொண்டு வந்தார். அம்மையாருக்குப் புரிந்ததோ என்னவோ, தலையை ஆட்டிக் கொண்டே வந்தாள். தன்னுடைய கணவனுக்கு இத்தனை தெரிந்திருக்கிறதே என்று பிரமிப்பு அவள் முகத்தில் வெளிப்படையாகத் தெரிந்தது. அவளுக்குப் புரியவில்லை என்பதும் அவருக்குத் தெரிந்திருக்கலாம். ஆனால் இது அவர்கள் இருவருக்கும் மிகவும் பிடித்தமான பாவனை நாடகம். அவர்களுடைய அன்னியோன்யம் எனக்கு ஆச்சரியத்தைத் தரவில்லை. ஒரு கணவன்—மனைவிக்கும் இடையே அலுப்பு ஏற்படுவதற்கு, சமமான அதிகப் படிப்புத்தான் காரணமோ என்று எனக்குத் தோன்றுகிறது'' என்றார் கபூர்.

''அவரவர்களுடைய 'ஈடுபாடுகளின் எல்லை' என்று சொன்ன நீங்கள், இப்பொழுது முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவது வேடிக்கையாக இருக்கிறது'' என்றான் ராகேஷ்.

''ஈடுபாடு என்பது கல்வியினால் ஏற்படுகிறது என்று யார் சொன்னார்கள்? கிராமத்திலிருப்பவன் ஓர் ஆகாய விமானத்தைக் கண்டு ஆச்சரியப்படுவதைப் பார்த்து நான் எத்தனை தடவைகள் பொறாமை கொண்டிருக்கிறேன், தெரியுமா? இந்த வியப்புணர்ச்சி இல்லாவிட்டால் வாழ்க்கை எப்படிச் சுவாரசியமாக இருக்க முடியும்? கல்விக்கும் நாகரிகத்துக்கும் மனிதன் கொடுக்கும் விலை, வியப்புணர்ச்சி'' என்றார் கபூர்.

ராகேஷ் தம்மை ஏற இறங்கப் பார்ப்பது அவருக்குத் தெரிந்தது. அவர் ஏன் இப்படி மனம் விட்டுத் தன்னிடம் விவாதிக்கிறார் என்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்திருக்கலாம். சாதாரணமாக அவர் வீட்டில் யாருடனும் பேசுவதே கிடையாது. வீட்டில் யார்தான் ஒருவரோடொருவர் இப்படிப் பேசிக் கொள்கிறார்கள்? நேரமேது? — ஆகவேதான் தந்தையுடன் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கிறோம் என்ற நினைவு அவனைத் தாக்கியிருக்கலாம். மோகினியின் விசுவரூபம் வீட்டை ஆக்கிரமித்த போது, இப்பொழுது இருப்பது போல் ஒரு சகஜமான சூழ்நிலையில் அவர்கள் தத்தம் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டதே கிடையாது. மோகினி இனி திரும்பி வரவே மாட்டாள் என்ற நிலையில், வீடு மகிழ்ச்சிகரமாக இருக்

கப் போகிறதா?...ஆனால்...ஆனால் அவர் நெஞ்சை ஏதோ அழுத்துவது போலிருந்தது.

ஷம்மீனுக்கும் எனக்கும் ஒரு நெருங்கிய பிணைப்பு ஏற்பட்டு விட்டது. அந்த உறவை என்னால் இனிமேல் துண்டித்துக் கொள்ள முடியாது. என்னுள் இருக்கும் அசிங்கமான ஏதோ ஒன்று அவளின்றித் தரிக்காது போல், என்னை ஆட்கொண்டு, அவளிடம் அடிமை யாக்கி விட்டது. இது 'அசிங்கமான'து என்று நான் ஏன் சொல்லிக் கொள்ள வேண்டும்? ஒன்றையொன்று வெறுக்கும் இரண்டு கபூர் பிம்பங்கள்! வாழ்நாள் முழுதும் இரண்டு பிம்பங்களும் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருக்கின்றன! இல்லா விட்டால், ஷம்மீனை என்னால் எப்படி ஒரே சமயத்தில் வெறுக்கவும், விரும்பவும் முடியும்? வெறுப்பு அவள் மீதா? என் மீதா? கல்வியும் நாகரிக மும் அழுத்தி வைத்திருந்த ஏதோ ஒன்று, தன் விடுதலையை இப்படியா கொண்டாட வேண்டும்? நான் செய்தது தவறு என்று எப்படிச் சொல்ல முடியும்? — மோகினி எவ் வாறு இருந்தாள்? நான் செய்தது நியாயந் தான், நியாயந்தான், நியாயந்தான்! அது நியாயமாகவே இருந்தால் இந்த அளவுக்கு அதற்காக நான் வக்காலத்து வாங்குவா னேன்?

ஷம்மீன், நான் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்கிறாள். 'ப்யோர் அன்ட் சிம்பிள் ப்ளாக் மெயில்'... இந்நிலையில் எனக்குக் குடும்பம் தேவை. அஞ் சலி தேவை. ரூபி தேவை. எல்லாரும் தேவை. மோகினி? — அவளுடன் நான் சந்தோஷமாக இருந்த நாட்களில் ஏதாவது ஒன்றை நினைத்து அசைபோட வேண்டும் என்று முயல்கிறேன். முடியவில்லை ... என் வாழ்க்கையை நாச மாக்கிய படுபாவி ... அந்தஸ்தும் பணமும் என்னை எங்கே கொண்டு விட்டிருக்கின்றன? ஷம்மீனுடன்...ஹோட்டலுக்கு நள்ளிரவில் திருடனைப் போல் நுழைந்து கொண்டிருக்கும் இந்தக் கோழைக்கு ... நான் கோழையா?— மோகினி, சொல்... நான் கோழையா?...

''அம்மாவை விவாகரத்து, அவள் அப் படிக் கோரா விட்டாலும், நீங்கள் செய்யப் போவதாகச் சொல்கிறீர்களே, இது வாஸ் தவமா?'' என்று கேட்டான் ராகேஷ்.

ஓ...! இதைப் பற்றியா யோசித்துக் கொண்டிருந்தான்? எதற்காகக் கேட்கிறான்? எனக்கு இவ்வளவு துணிச்சல் எப்படி ஏற்பட் டது என்ற ஆச்சரியமா? அல்லது இவ்வளவு துணிச்சல் ஏற்படுவதற்கு ஏதேனும் காரணம் இருக்கக் கூடுமோ என்ற சந்தேகமா?

கபூர் மௌனமாகத் தலையசைத்தார்.

''எப்போதோ செய்திருக்க வேண்டியதை இப்பொழுது செய்யப் போவதாகச் சொல் கிறீர்களே, இதற்கு ஏதாவது காரணம் உண்டா?''

கபூர் பதில் சொல்லவில்லை. சில விநாடிகள் மௌனம் நீடித்தது.

''உங்களுக்குப் பதில் சொல்ல விருப்ப மில்லையா?''

''நீ என் மகனாக இல்லா விட்டால் இதைப் பற்றி உன்னிடம் விவாதிக்க முடி யும். நீ என்னைப் பழங்காலத்து மனிதனாக நினைத்துக் கொள்ளலாம் ... அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை.''

ராகேஷ் புன்னகை செய்தான்.

''எதற்குச் சிரிக்கிறாய்?''

''நீங்கள் பழங்காலத்து மனிதராக இருந் திருந்தால் உங்கள் மனைவியை உங்களால் தள்ளி வைத்திருக்க முடியும். இக்காலத்து மனப்பான்மை இருந்திருந்தால் விவாக ரத்து செய்திருக்கலாம். உங்கள் துரதிருஷ்டம் உங்களுடையது ஓர் இரண்டுங்கெட்டான் நிலை....!''

அவன் சொல்வது என்னைத் துன்புறுத்து கிறது. ஏனெனில் இதுதான் உண்மை. என் னால் என் தந்தையிடம் இப்படிப் பேசியிருக்க



முடியுமா? பொருளாதார வசதி ஏதுமில்லாத குடும்பத்தில் பிறந்திருந்தாலும், என் தந்தை எனக்கு நினைவு வைத்துக் கொள்ளத் தக்க இளமைப் பருவத்தைத் தராவிட்டாலும், வீட்டில் அவர் சொல்வதுதான் கடைசி வார்த்தையாக இருந்தது. என் நினைவுக்கு வருகிறது ... அம்மா அவரைக் கண்டு நடுங்குவாள். அவர் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர். வாங்கின சம்பளத்தையெல்லாம் என்ன செய்தார் என்பது என் ஞாபகத்தில் இல்லை. வீட்டுக்கு வந்தாரானால் ஒரே அதட்டலும் அதிகாரமும்தான். அம்மா இதனாலேயே சீக்கிரம் போய் விட்டாள். நானும் மோகினியின் அப்பாவிடம் தஞ்சம் புகுந்தேன். பல வருஷங்களுக்குப் பிறகு அப்பாவின் உடம்பைத் தான் என்னால் பார்க்க முடிந்தது. ஊதியானவில் யார் வீட்டிலோ செத்துக் கிடந்தார். அந்த வீட்டில் இருந்தவள், என் அப்பா அவளைத் திருமணம் செய்து கொண்டதாகச் சொன்னாள். அவளுக்கு ஏழெட்டுக் குழந்தைகள். அதற்குப் பிறகு அவளை நான் பார்க்கவேயில்லை .. மூத்த பையன் ஏதோ வேலைக்குச் சிபாரிசு செய்யும்படி என்னைத் தேடிக் கொண்டு வந்தான். மோகினி விரட்டி விட்டாள். நான் எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்பதைப் பற்றி மோகினி கட்டிக் காட்டாமல் இருந்ததே கிடையாது. என் அப்பா செய்தது தவறு என்று சொல்ல முடியுமா? அவர் விரும்பியதைச் செய்தார். எனக்கு அந்தத் துணிவு இருக்கிறதா?...ஏன் இல்லை? ... நான் ஒரு கோழை இல்லை... மோகினி, நீ சொல் ... நான் கோழையா?

''வீடு வந்து விட்டது... எங்கே இதைத் தாண்டிப் போய்க் கொண்டிருக்கிறீர்கள்?'' என்றான் ராகேஷ்.

''ஓ!... ஐ ஆம் ஸாரி... ஏதோ நினைவு'' என்று சொல்லிக் கொண்டே காரைக் கொஞ்சம் 'ரிவர்ஸ்' செய்து விட்டுக் காம்பவுண்டுக்குள் நுழைந்தார் கபூர்.



'போர்டிகோ'வில் மோகினியின் கார் இல்லை. அந்த வெறுமை அவருக்கு என்னவோ போலிருந்தது. எப்பொழுதும் அவள் காரை அங்குதான் நிறுத்தி வைப்பது வழக்கம். இப்பொழுது கார் 'ஷெட்'டில் இருந்தது.

இருவரும் ஹாலில் நுழைந்த போது அசோக் ஆஃபீஸ் போக ஆயத்தமாக இருந்தான். அவனருகில், ஒரு தம்ளர் தண்ணீரை அவனுக்கு நீட்டியவாறு அவன் மனைவி சசி, இரவு உடையில் நின்று கொண்டிருந்தாள்.

அஷோக் ராகேஷைப் பார்த்துப் புன்னகை செய்தான். ஒருவினாடி தயக்கத்துக்குப் பிறகு ''ஹலோ யு ஆர் பேக்'' என்றான்.

ராகேஷ் பதில் சொல்லவில்லை. மாடியிலுள்ள தன் அறையை நோக்கிச் சென்றான்.

''அம்மாவின் சிநேகிதர்கள்....(இதைச் சொல்லிவிட்டு இவ்வாறு சொன்னது சரியா என்று ஒருவிதமான தயக்கம்) எல்லாருக்கும் ஃபோன் செய்து பார்த்தேன். அங்கெல்லாம் வரவில்லை என்கிறார்கள்'' என்றான் அஷோக்.

கபூர் பதில் பேசாமல் மேஜையின்மீதிருந்த பத்திரிகையை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தார்.

''அம்மா எங்கே போயிருக்கக்கூடும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டான் அஷோக்.

''எனக்கென்ன தெரியும்? நான் நேற்றிரவு இங்கில்லை'' என்றார் கபூர்.

''நேற்று சாயந்திரம் உங்கள் ஆபீசுக்குத்தான் போனாள் என்று மான்சிங் சொல்கிறான் ... ஆஃபீசுக்கு ஃபோன் செய்து கொண்டிருந்ததாக அவன் ...''

''எனக்குத் தெரியாது. நான் ஆஃபீஸில் இல்லை.''

''பம்பாய்க்கு ஃபோன் செய்து பார்க்கட்டுமா? மாமாஜியிடம் ஒருவேளை...''

''என்னை ஏன் கேட்கிறாய்? அம்மாவின் பிரிவை உன்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை என்றால் செய்து பாரேன்?''

''அம்மாவின் பிரிவைத் தாங்கிக் கொள்ள முடியாது என்பதற்காக நான் சொல்லவில்லை. அம்மா வீட்டை விட்டுப் போய் விட்டாள் என்று எல்லோருக்கும் தெரிந்து அதனால்...''

''அம்மா திரும்பி வரமாட்டாள் என்று எப்படி நீ நிச்சயமாகச் சொல்கிறாய்?''

''அதுவா ... ஐ மீன்...'' அஷோக் இதற்குப் பதில் சொல்ல முடியாமல் சற்றுத் தடுமாறினான்.

கபூர் பத்திரிகையை மடித்து வைத்துவிட்டு எழுந்திருந்தார்.

''ஹல்லோ டாடி ... ராகேஷ் வந்துவிட்டானா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அஞ்சலி.

கபூர் தலையசைத்தார்.

''விஜயா?''

''என்ன சொல்கிறாய்?''

''அவர்கள் திருமணம் செய்து கொள்ளப் போகிறார்கள் இல்லையா?''

கபூர் பதில் சொல்லவில்லை.

''இதைப் பற்றி நான் ஒன்று சொல்லலாம் என்று நினைக்கிறேன்'' என்றான் அஷோக்.

''என்ன?'' என்று கேட்டார் கபூர்.

''இந்தத் திருமணத்தைப் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?''

''அதைப் பற்றி நீயல்லவோ ஏதோ சொல்லப் போவதாய்ச் சொன்னாய்?''

''அம்மா வீட்டை விட்டுப் போவதற்கு இதுவும் ஒரு முக்கிய காரணமென்று நினைக்கிறேன். ராகேஷின் இந்த முடிவு ... ஐ மீன், விஜயாவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்பது ஒரு திமர் உணர்வின் காரணமாக இருக்கலாம். பணக்கார இளைஞர்கள் ஏழைப் பெண்களிடம் காதல் கொள்ளுதல் என்பது, திரைப் படங்களினால் அதிக அளவில் ஆபாசப்படுத்தப்பட்ட ஒரு கொச்சையான இலட்சியமாகி விட்டது. ராகேஷ் போன்ற இளைஞர்கள் இதனால் பாதிக்கப்படுவதுதான் நம் துரதிர்ஷ்டம்...''

அஞ்சலி கைதட்டினாள். ''அருமையான பேச்சு ... நீ ஏன் அரசியலில் சேரக்கூடாது அஷோக்?''

''ஷட் அப் ... பெரியவர்கள் பேசும்போது குறுக்கிடாதே'' என்றான் அஷோக் கோபத்துடன்.

''ஐயா! இளமை மிக்க வயோதிகரே! நான் சொல்வதைக் கேளுங்கள். ராகேஷ் யாரைக் கல்யாணம் செய்து கொண்டால் உங்களுக்கு என்ன?'' என்றாள் அஞ்சலி.

''நான் உனக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியமில்லை. உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ .. இந்த வீட்டில் யாரும் உருப்படியாக வளரவில்லையே என்பதுதான் என் வருத்தம்'' என்றான் அஷோக்.

''மற்றவர்களைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள்? மேலும் மேலும் அவமானப் பட வேண்டுமா? நீங்கள் ஆஃபீசுக்குப் போங்கள்...'' என்றாள் சசி.

''வெளியில் தலைகாட்டுவது எனக்கு அவமானமாக இருக்கிறது. நம் குடும்பத்தில் யாரைப் பற்றி வெளியில் நல்ல பேச்சாக இருக்கிறது? இதெல்லாம் போதாதென்று யாரோ ஒரு தெருப் பெண்ணை அழைத்துக் கொண்டு வந்து, 'அவளைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்' என்கிறான் என் தம்பி...''

''விஜயா ஒரு தெருப் பெண்ணல்ல. எனக்கு அவளை மிகவும் பிடித்திருக்கிறது. ராகேஷ் அவளைத் திருமணம் செய்து கொள்வதைப் பற்றி எனக்கு ஆட்சேபணை இல்லை'' என்றார் கபூர்.

''ஓ... உங்கள் ஆசீர்வாதத்துடன்தான் நடக்கப் போகிறதா? அப்படியானால் நானும் இந்த வீட்டை விட்டுப் போகும்படியாக இருக்கும்'' என்றான் அஷோக்.

---

**ஏழு பாவங்கள் !**

ராஜ்காட்டில் ஒரு சுவரில் மேற்கண்ட வாசகங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன:

1. கொள்கை இல்லாத அரசியல்
2. உழைப்பு இல்லாத செல்வம்
3. மனச்சாட்சி இல்லாத இன்பம்
4. நன்னடத்தை இல்லாத அறிவு
5. நாணயம் இல்லாத வியாபாரம்
6. மனிதாபிமானம் இல்லாத விஞ்ஞானம்
7. தியாகம் இல்லாத வழிபாடு

ஆதாரம்: ''உமன்ஸ் எரா'' - ''ராதா''







# வண்ணத்துப் பூச்சி உங்கள் தனிப்பட்ட ஆர்டர்களை ஏற்றுக்கொள்கிறது!

## கோ-ஆப்டெக்ஸ் முதன்முறையாக அறிமுகப்படுத்தும் இணையற்ற திட்டம்!

ஒவ்வொரு வெள்ளிக்கிழமைதோறும் கோ-ஆப்டெக்ஸ் கலைவல்லுநர் உங்கள் தனிப்பட்ட ஆர்டர்களை ஏற்றுக்-கொண்டு, உங்கள் விருப்பத்திற்கேற்ற உங்கள் டிசைன் புடவைகளை குறிப்பிட்ட காலத்தில் உங்களுக்கு வழங்குவார்.

ஓர் அரிய சந்தர்ப்பம். இத்திட்டம் கீழ்க்கண்ட வண்ணத்துப் பூச்சியின் ஒரே சிறப்பு விற்பனை நிலையத்தில் மட்டுமே!

**வானவில்** சில்க் பேலஸ்
(ஆபட்ஸ்பரி அருகில், தேனாம்பேட்டை)
தொலைபேசி: 444236




CO 3200.C

# ரேஸர் வெட்டும் ரோமக் கட்டையும் ஏற்படும்போது வெட்கப்படுங்கள்... அல்லது



# ஆன் பிரெஞ்ச் ஹேர் ரிமூவர் தரும் பட்டு மேனியால் பெருமைப்படுங்கள்

ஷேவிங் வேண்டாம், அது ஆண்களுக்கு மட்டுமே! தவிர, உங்கள் சருமத்தை வெட்டி வதைக்கும்...,ரோமம் கட்டையாக வளரும். இதோ ஒரு விடிவு-பெண்மைக்கே உரிய நளினமான வழியில் வேண்டாத ரோமத்தை விரட்டியடிக்கலாம்.மென்மையான ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவர்-இந்த க்ரீமை வேண்டாத ரோமத்தின் மீது தடவுங்கள். சிறிது நேரம் கழித்துத் துடைத்து எடுங்கள். ஆஹா! உங்கள் மென்பட்டு மேனி கண்டால் கண்பட்டு விடாதோ! இந்த க்ரீம் சருமத்தின் உட்சென்று வேலை செய்து வேண்டாத ரோமத்தை வழியனுப்புகிறது...வாரக்கணக்கில் பட்டுப் போல் மென்மை—தொட்டுப் பார்த்தால் மழமழப்பு...பெண்மையின் நளினத்தைப் பேசுகிறது உங்கள் மேனி-இல்லையா? எனவே இக்கணமே ரேஸருக்கு வழியனுப்பு; ஆன் பிரஞ்ச் ஹேர் ரிமூவருக்கு வரவேற்பு!



## ஆன் பிரெஞ்ச்

### ஹேர் ரிமூவர்

அருவருப்பூட்டும் ரோமத்தை அகற்றும் அருமையான க்ரீம்




2 சைஸ்களில் கிடைக்கிறது : 40 கிம் மற்றும் 75 கிம்.

Licensed User of TM : Geoffery Manners &Co. Ltd.

126 HR-182 Tam

''யாரும் இந்த வீட்டில் இருக்க வேண்டும் என்று நான் வற்புறுத்தவில்லை'' என்றார் கபூர்.

''நீங்கள் நேற்றிரவு எங்கே போயிருந்தீர்கள்?'' அஷோக் மிகவும் இயல்பான குரலில் இதைக் கேட்டான்.

''அதைப் பற்றி நான் உனக்குச் சொல்ல வேண்டுமென்ற அவசியம் இல்லை'' என்று சொல்லிக் கொண்டே தம் அறையை நோக்கிச் சென்றார் கபூர்.

''லுக் அட் ஹிம் ... நம்மை அலட்சியப் படுத்துகிறாராம்'' என்று சசி சொல்வது அவர் காதில் விழுந்தது. திரும்பிப் பார்த்தார். அஞ்சலி சிகரெட் பற்ற வைத்துக் கொண்டிருந்தாள். தம் கோபத்தைக் காட்டிக்கொள்ள அவளுக்குத் தெரிந்த வழி இது ஒன்றுதான். அஷோக்தான் மோகினியின் குடும்பத்துக்குச் சரியான வாரிசு! அஷோக் இப்படி நடந்துகொள்வான் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. பொதுவாக அவருக்கும் மோகினிக்கும் இடையே நடக்கும் சண்டைகளில் அவன் அவரைத்தான் இதுவரையில் ஆதரித்து வந்திருக்கிறான். அவன் இந்தத் திருமண விஷயத்தில் இத்தகைய ஒரு தீவிரமான அபிப்பிராயம் வைத்திருக்கிறான் என்பது ஆச்சரியமாக இருக்கிறது. இதுவரை குடும்ப விவகாரங்களில் பட்டும் படாமலும், தான் உண்டு தன் மனைவி உண்டு என்று இருந்தவனுக்குத் திடீரென்று இப்படியொரு மாறுதல் ஏற்படுவதற்கு என்ன காரணம்? நல்ல படிப்பு, நல்ல வசதி, சந்தோஷமான குடும்பம் (அவனைப் பொறுத்த வரையில்) பணக்காரச் சராசரி இளைஞன் ... தனக்கு என்ன வேண்டுமென்று ஆரம்பத்திலிருந்தே தீர்மானித்து, அவற்றை அடைவதில் வெற்றியும் கண்டவன். இப்பேர்ப்பட்டவர்களுக்கு உலகத்தில் 'வித்தியாசமான' காரியங்கள் நடக்கக் கூடும் என்பதைப் புரிந்துகொள்வதற்கான 'கற்பனை' ஏன் இருப்பதில்லை? மோகினியின் அப்பா இவனைப் போல்தான் இருந்திருப்பாரோ என்னவோ? வெளியில் போய் விடுவேன் என்று பயமுறுத்துகிறான். போகட்டும். எனக்குக் கவலையில்லை.

ஆஃபீஸ் போயாக வேண்டும். இன்று மாலை ஒரு முக்கியமான கூட்டம். அதற்கு முன் சில பைல்களைப் புரட்டிப் பார்த்தால் நல்லது. அந்தக் கூட்டத்தில் விவாதிக்கப் பட வேண்டிய விஷயத்தைப் பற்றி யோசிக்கலாம் என்றால் — சிந்தனையே ஓடவில்லை. இன்றிரவு ஷம்மீனைப் பார்க்க வேண்டுமென்பதுதான் நினைவுக்கு வருகிறது. நேற்றிரவுச் சம்பவங்கள்...! அவருக்குக் கனவு காண்பது போலிருந்தது. மோகினியின் அப்பா போட்ட விலங்கைக் காட்டிலும் பெரிய விலங்காக ஷம்மீன் போட்டு விட்டாள். இதிலிருந்து தப்ப முடியாது. மனிதன் பிறக்கும் போது சுதந்திரமாகத்தான் பிறக்கிறான்; சமூகம் அவனுக்குத் தளையிடுகிறது! சமூகமா தளையிட்டது? இல்லை .. நான்தான் கைகளை நீட்டினேன். நான் இயல்பாக இருக்க முயன்றேன்... முடியவில்லை. இந்த ஷம்மீனுடன் வாழ்நாள் முழுதும் கழித்தாக வேண்டும்? — ஒரு சிறையிலிருந்து தப்பி இன்னொரு சிறைக்குள் சென்று அகப்பட்டுக் கொள்வதைத் தவிர மனிதனுக்கு வேறு கதி மோட்சமே கிடையாதா? கைதியாக இருப்பதுதான் சுதந்திரம் என்ற மயக்கத்தில் ஆழ்ந்த திருப்தி அடைவதுதான் மனப் பக்குவமா?

அவர் மறுபடியும் ஹாலுக்கு வந்த போது, மான்சிங் கேட்டான்: ''ப்ரேக்ஃபாஸ்ட் கொண்டு வரலாமா சாஹேப்?''

''வேண்டாம்.''

''குட் மார்னிங் டாடி!''

அவர் திரும்பிப் பார்த்தார். ஸ்வர்ணா! அப்பொழுதுதான் எழுந்திருந்தாள் போலிருக்கிறது. கண்கள் சிவந்திருந்தன.

''ராகேஷ் வந்து விட்டானா?''

கபூர் தலையசைத்தார்.

''விஜயா? அவளை அவன் மணக்கப் போவதில்லையா?''

''என்ன பதில் சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறாய்?''

''மணக்கத்தான் வேண்டும். ரூபிக்கு ஓர் அம்மா வேண்டாமா?''

''ரூபி எங்கே?''

''நர்ஸரியில் விளையாடிக் கொண்டிருக்கிறாள். விஜயா வீட்டை விட்டுப் போனது அவளுக்கு ஒரு பெரிய அதிர்ச்சி. பாட்டி போனதைப் பற்றி அவள் கவலைப்படவில்லை.''

''அதைப் பற்றி அவள் கேட்கக்கூட இல்லையா?''

''இல்லை.''

''மோகினி ரூபியின் மீது உயிராக இருந்தாள். இதை மறுக்க முடியாது.''

''ஏன் அம்மா செத்துப் போய்விட்டமாதிரி பேசுகிறீர்கள்?'' என்று கேட்டாள் ஸ்வர்ணா.

''என்ன சொல்கிறாய் நீ?'' என்று திடுக்கிட்ட குரலில் வினவினார் கபூர்.

''அம்மாவைப் பற்றி இறந்த காலத்தில் பேசுகிறீர்களே, அதற்காகக் கேட்டேன். ஏதாவது தெரியுமா?''

''உனக்கு இதைப் பற்றி என்ன ஒரு குரூரமான சந்தோஷம்!''

''உங்களுக்கு இல்லையா சந்தோஷம்?''

''மோகினி சாக வேண்டும் என்று நான் என்றுமே நினைத்ததில்லை'' என்றார் கபூர்.

''நான் மோகினியின் கணவனாக இருந்திருந்தால் என்றோ அவளைக் கொன்றிருப்பேன். இந்த வீட்டை நரகமாக்கியதே அவள்தான்...'' என்று ஆவேசத்துடன் கூறினாள் ஸ்வர்ணா. (தொடரும்)

---

**கல்யாணத்தில் கண்ணாமூச்சி!**



ஆஸ்டிரியாவில் திருமணத்தின்போது ஒரு விநோதமான சம்பிரதாயம் உண்டு. திருமணத்துக்கு இரண்டு தினங்களுக்கு முன்னர் பெண் வீட்டார் மணப்பெண்ணை யாரும் எளிதில் கண்டுபிடிக்க முடியாத இடத்தில் ஒளித்து வைத்து விடுகிறார்கள். புது மாப்பிள்ளை எப்படியாவது திருமணப் பெண்ணைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். அதுவரை விருந்தினர்களுக்கு வேண்டிய எல்லா உணவு, மதுபானங்களுக்காகும் செலவைப் புது மாப்பிள்ளைதான் ஏற்றுக்கொள்ள வேண்டும்! — ரமா ராமநாதன்

# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்* டானிக்

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவளுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின், பின்னர் பாருங்களேன் அவள் வளர்ச்சியை! பசித்துப புசிப்பாள்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச சத்து, இவற்றோடு உங்கள் மகளின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.




# இன்க்ரிமின்* டானிக்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்
உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
(Lederle) ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு

*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

தாயே பராசக்தி,

உன் நாடகக்கூத்து முடியவே முடியாதா?

காலகாலங்களாக நீ ஆடிவரும் ருத்ர தாண்டவத்தால், மானிட ஜாதி நிலைகெட்டுத் தடுமாறிப் போயிருக்கிறது.

இருண்ட அறைக்குள்ளே கைகால்களில் விலங்கு பூட்டப்பட்ட நிலையில் தர்மம் சாகக் கிடக்கிறது.

மிருகத்தை வேறாகவும், மனிதனை வேறாகவும் நீ படைத்தாய்; இப்போது இரண்டையும் ஒன்றாக்கிக் கொண்டிருக்கிறாய்.

உன்னுடைய தாண்டவத்தில் மிருகம் மனிதனாகிவிடும் என்றால் நான் மகிழ்ச்சியடைவேன். ஆனால் எங்கே மனிதன் மிருகமாகி விடுவானோ என்றே அஞ்சுகிறேன்.

'நான் சக்தி; நான் பராசக்தி; நான் மாகாளி' என்ற எண்ணமே உன்னிடம் மேலோங்கி யிருக்கிறதே தவிர, நீ படைத்த மக்களின் நிலையே உனக்குத் தெரியவில்லையே!

உனக்குக் கோவில்கள் கட்டினோம்; பூஜைகள் செய்தோம்; ஆராதித்தோம்; எல்லாமே நீ எங்களை வாழ வைப்பாய் என்ற நம்பிக்கையிலேதான்! ஆனால் பருவ காலத்தில் மழை வரச் செய்யக்கூட உனக்குச் சக்தி இல்லாமற் போய்விட்டது.

ஆனாலும் நீ பராசக்தி!

பெண்மையின் ஒவ்வொரு வடிவத்தையும், உனது வடிவமாகவே நாங்கள் காண்கிறோம்.

ஆனால் தாள முடியாத வறுமையினால், ஏராளமான பெண்களின் புனிதத்துவம் கெட்டுவிட்டது.

உனக்குத் தாண்டவமாடத்தான் தெரிகிறதே தவிர, தழுவிக்கொண்டு வாழ வைக்கத் தெரியவில்லையே!

எங்கள் கோவில்களில் நீ ஒரு கையில் வாளும், ஒரு கையில் அறுபட்ட தலையும், கழுத்திலே மண்டையோட்டு மாலையுமாகக் காட்சியளிக்கிறாய். இதுதான் தாய்மையின் லட்சணமா?

சுழன்றடிக்கும் சூறைக் காற்று உயர்ந்து நிற்கும் மரங்களைத்தான் சாய்க்கும்; உனது காற்றோ மல்லிகைச் செடியையும் முல்லைச் செடியையும் வேரோடு பிய்த்தெறிகிறது.

அப்பாவிகளையும் நீ ஏன் அவதிப்படுத்துகிறாய்?

தாய் பேயாகிவிட்டால், சேய் நாயாகி அலையாதா?

கொடிய முள் மரங்களின் மேலே கூட அழகான புஷ்பங்களை மலர வைக்கும் சக்தி உடைய நீ, இப்போது மலர்களையும் முள்ளாக்கிக் கொண்டிருப்பது ஏன்?

எனது படுக்கையை நோய்ப் படுக்கையாக்கிவிட்ட உனக்கு எப்படித்தான் நன்றி சொல்வதென்று எனக்குப் புரியவில்லை.

நீ ஆடும் இந்தத் தாண்டவத்தின் முடிவு எங்களுக்கு நன்மையாக இருக்குமானால், எங்கள் சமுதாயம் உனக்கு இன்னும் சில கோயில்களைக் கட்டும்.

சர்வ நாசத்துக்கே இந்தத் தாண்டவம் என்று கதை முடியுமானால், தாயே பராசக்தி, 'எங்கள் தெய்வ நம்பிக்கையே பொய்' என்றாகிவிடும்.

இந்து தர்மத்தில், தொடக்கம் சுகமாக இருந்தால் முடிவு துன்பமாக இருக்கும் என்றும், தொடக்கம் துன்பமாக இருந்தால், முடிவு சுகமாக இருக்கும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வளவு காலம் கழித்து நீ எதையோ தொடங்கியிருப்பது எங்களுக்குத் தெரிகிறது. அது சுகமா துக்கமா என்று இன்னும் எங்களுக்குத் தெரியவில்லை.

அது ஒருவேளை இரண்டுமே இல்லாத மயக்க நிலையாக இருக்கலாம்.

எனினும் இன்னும் உன்னை நாங்கள் நம்புகிறோம்.

நாங்கள் கனி பறிக்க விரும்புகிறோம்; நாங்கள் ஓடியாடி உழைக்க விரும்புகிறோம்; உரத்த குரல் கொடுத்து உலகத்தை அழைக்க விரும்புகிறோம்.

## பராசக்திக்கு விண்ணப்பம்

அனுமதி கொடு! எங்களை அசக்தர்களாக் காதே!

நம்பிக்கையின் மீதே மானிட ஜாதி வாழ்ந்து கொண்டிருக்கிறது.

குழந்தையின் நம்பிக்கையைத் தாய் சிதைத்துவிட்டால், குழந்தை கொடியவனாக மாறிவிடக் கூடும்.

அப்போது உனது தாண்டவத்தை விட அந்தக் குழந்தையின் தாண்டவம் பயங்கரமாக இருக்கக் கூடும்.

தாயே பராசக்தி,

உன்னை மதுரை மீனாட்சியாக, காஞ்சி காமாட்சியாக, திருக்கடையூர் அபிராமியாகவே நாங்கள் பார்க்க ஆசைப்படுகிறோம்.

மூல முதல்வனின் அமைதி உனக்கும் வர வேண்டுமெனப் பிரார்த்திக்கிறோம்.

படுக்கையில் இருக்கும் நோயாளிக்குப் பிரார்த்தனையைத் தவிர வேறு பயனுள்ள கருவி எது?

எல்லோர்க்கும் எல்லாமும் கிடைப்பதற்கான இடம் நோக்கி எங்களை அழைத்துச் செல்வதற்காகக் கையில் இருக்கும் வாளைக் கீழே போடு. மண்டையோட்டு மாலையைக் கொஞ்சம் கழற்றி வை. கையில் இருக்கும் அசுரனின் தலையைப் புதைத்துவிடு.

அவன் அசுரன்; அவன் தலையை நீ கொய்தது சரிதான்.

தயவு செய்து எங்களை வாழவிடு!

தாயே பராசக்தி,

நீ தாயாகவே இருக்க முயற்சி செய்!

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran






# கடும் அதிவெப்பத் தேவைகளுக்கு நம்பகமானவை

## ∴பயர்க்ரீட் மற்றும் ∴பயர்க்ரீட் சூபர்

## ***ஏசிசி*** யின் காஸ்டபிள் ரி∴ப்ராக்டரிகள்

எவ்வடிவத்திலும் வார்க்கலாம், எந்த அளவிற்கும் உருவமைக்கலாம், சிறு துணுக்குகளாதல் மற்றும் தேய்மானம் இவற்றைத் தவிர்ப்பதோடு வெப்ப அதிர்ச்சிகளையும் தாங்க வல்லவை.

1350° செ. வரையிலுமான வெப்பநிலைகளுக்கு ∴பயர்க்ரீட், 1550° செ. வரையிலுமான வெப்பநிலைகளுக்கு ∴பயர்க்ரீட் சூப்பர்.

வாடிக்கையாளரின் தேவைக்கு தகுந்தவாறு காஸ்டபிள் ரி∴ப்ராக்டரிகள் கிடைக்கின்றன.

***ஏசிசி***—தரமான
தயாரிப்புகளுக்கு நம்பகமான உத்தரவாதம்

தி அசோசியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்



ACC. 1050 TAM.

Registered No. M.
Registered as a Newspaper in Ceylon

# PERKINS

## P6-354 V

## ALL YOU'VE EVER WANTED IN A VEHICULAR ENGINE





Power that remains unfailing throughout. Power that keeps the vehicle going all the time, very economically.



Internationally reputed for reliability, Perkins Diesel never lets you down.



Perkins has all that you have wanted in an engine for a transport vehicle.

Simpson & Co. Ltd

Head Office:
202/203, Mount Road, Madras-2

*Branches,*
Bangalore, Ootacamund, Tiruchirapalli,
Secunderabad.

S-364